செல்வச்செழிப்பிற்கான தேடலும்,
வழியும்!

# ஈர்ப்பு விதியும், பணமும்...



"நீங்கள் தேடும் செல்வம் இது தான்!"

தேவா முத்துசாமி

வறுமையிலிருந்து மீண்டு வர ஒவ்வொரு கணமும்
முயற்சித்துக் கொண்டிருக்கும் உறுதியான மனம்
படைத்த உங்களுக்கு இந்த புத்தகம் சமர்ப்பணம்.



நம்மை வாழ வைக்கும் இந்த பூமிக்கு நம்முடைய
மனமார்ந்த நன்றிகளை செலுத்துவோமாக!!

# நன்றிகள் கோடி...

செல்வச்செழிப்பை அடைய வேண்டும் என்ற என்னுடைய பயணத்தில் என்ன செய்வதென்று அறி யாமல் தவித்து கொண்டிருந்த எனக்கு, வழிகாட்டியாய், துன்பத்தால் துவண்டு போன நேரங்களில் எனக்கு உற்ற நண்பனாய் இருந்து, என்னுடைய அனைத்து முயற்சிகளிலும் உறுதுணையாய் இருந்து எனக்கு சக்தி அளித்த பிரபஞ்சத்திற்கு என் முதல் நன்றி...

என்னை புரிந்துகொண்டு என் முயற்சிகளை அனும தித்து, என் மீது நம்பிக்கை கொண்டு, எனக்கு உறுது ணையாய் இருந்துகொண்டிருக்கும் என்னை பெற்றெ டுத்த தெய்வங்களுக்கு அவர்கள் பாதம் தொட்டு நன்றி களை உரித்தாக்குகிறேன்.

எனக்கு அனைத்துமாய் இருந்த என் நண்பன் கார்த்திக் அவர்களுக்கும், என் அண்ணன் முரளி அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகள். என் முயற்சிகளை ஊக்கு வித்து இதை எழுதிமுடிக்க உதவிய அண்ணன் முரளி அவர்களுக்கு மறுமுறை நன்றி உரக்க கடமைபட்டிருக் கிறேன்...

இந்த புத்தகத்தை எழுதி முடிக்க நான் பயன்படுத்திய GOOGLE இணைய சேவைக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

இந்த புத்தகம் வெளிவருவதற்கு உதவிய அணைத்து நல்ல உள்ளங்களுக்கும், நிறுவனங்களுக்கும் என் மனமார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

நான் வறுமையில் பிறந்ததற்கும், அதன் மூலம் அடைந்த கஷ்டங்களுக்கும், அவமானங்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றிகள். நான் சந்தித்த ஒவ்வொரு மனிதருக்கும் என்னுடைய நன்றிகளை உரித்தாக்குகிறேன். ஏனென்றால் அவர்கள் அனைவரும் சேர்ந்து தான் எனக்கு அனுபவங்களை தந்து இந்த புத்தகம் எழுத காரணமாய் இருக்கிறார்கள். சிலர் உறுதுணையாய் நின்றார்கள். சிலர் படிப்பினையை தந்தார்கள். எனவே அவர்கள் அனைவருக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றிகள்.

# பொருளடக்கம்

# முன்னுரை...[1]

அற்புதமான இந்த வாழ்க்கையை முழுமையாக அனுபவித்து வாழ்வது என்பது ஒரு கலை. அதை கற்று தேர்ந்தால் மட்டுமே வாழ்க்கை நாம் விரும்பியது போல் உருவாக்கவும் முடியும். நம் வாழ்க்கையை நாம் தான் உருவாக்குகின்றோம் என்பது நம்மில் எத்தனை பேருக்கு தெரியும்? அப்படியே தெரிந்திருந்தாலும் நம் மால் அதை ஏற்றுக்கொள்ள முடிந்ததா என்பது கவ னிக்க வேண்டிய ஒன்று.

வாழ்க்கை அபரிமிதமானது. அது கொண்டாட வேண் டிய ஒன்று என்பதை நமக்கு அனுபவபூர்வமாக உணர்த்த பிரபஞ்சம் எப்போதும் தயாராக உள்ளது. ஆனால் அதற்க்கு நீங்கள் அனுமதி தந்தீர்களா என்பது தான் கேள்வி !

உங்களை நீங்கள் செம்மைப்படுத்தி கொண்டால் மட் டுமே மற்றவர்களுக்கும் உங்களால் உதவமுடியும். உங் கள் குடும்பத்திற்கு, உங்களை சார்ந்த உறவுகளுக்கும், நண்பர்களுக்கும் நீங்கள் தேவையானதையும் அதோடு சந்தோஷத்தையும் தர முடியும்.

உங்களிடமே நீங்கள் பற்றாக்குறையை உணர்ந்தால் உங்களால் மற்றவர்களுக்கும் அதைத்தான் தர முடியும். உங்களிடம் அபரிமிதமாக இல்லாத ஒன்றை நீங்கள் மற்றவர்களுக்கு தர விரும்பமாட்டீர்கள். இது எல்லோருக்கும் பொதுவான ஒன்றுதான் ஆக முதலில் நாம் அந்த அபரிமிதத்தை கைப்பற்றியாக வேண்டும்.

ஆனால் அபரிமிதம் என்பது இயல்பான, இயற்கையான ஒன்று. நீங்கள் அனுமதித்தால் அது உங்கள் வாழ்விலும் நிரம்பி வழியும். இயற்கையின் கருணை அப்படி.

உங்களுக்குள் நிறைய காயங்கள் இருக்கலாம் அதிலும் இயலாமையால் நீங்கள் சந்தித்த அவமானங்கள் உங்கள் நெஞ்சில் ரணமாய் நிறைந்திருக்க கூடும். அதிலிருந்து மீண்டு வந்து "நான் யார் என்று பார்" என்று இந்த உலகத்திற்கு உரக்க சொல்லவேண்டும் என்ற தீவிரம் தான் உங்களை இங்கே கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது.

வெற்றி பெறுவதற்கு செல்வச்செழிப்பை அடைவதற்கு தீவிரம் மட்டும் போதாது.

இந்த உலகில் இயற்கையாக இயங்கிக்கொண்டிருக்கும் சில விதிகளை பற்றியும் அதற்க்கு ஏற்றது போல் நாம் எப்படி வாழ வேண்டும் என்பதையும் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். இது மிகவும் முக்கியம்.

அதிலும் இந்த ஈர்ப்பு விதியும், அதிர்வுகளின் விதியும் முக்கியமான ஒன்று அது என்ன என்பது பற்றியும் அதை எப்படி பயன்படுத்தி கொள்வது என்பது பற்றியும் நீங்கள் முழுமையாக இந்த புத்தகத்தை வாசித்து முடிக்கும்பொ ழுது அறிந்துகொள்வீர்கள்.

இதை கருத்துக்களாக மட்டும் அல்லாமல் வாழ்க்கை முறையிலும் இதை உங்களின் இயல்பான குணமாக மாற்றும் பயிற்சிகளும் இதில் உண்டு. உங்கள் தேடலின் தாகம் இதில் நிச்சயம் பூர்த்தி அடையும்.

இதை வாழ்வில் முயற்சித்து உங்களின் வாழ்வை செழிப்படைய செய்துகொள்வீர்கள் என்று எனக்கு முழு மையான நம்பிக்கை உள்ளது.

**உண்மை தேடல் அதை அடைந்தே**
**தீரும் என்பது விதி.**

# வாழ்க்கை செல்வசெழிப்பாகும் தருணம் !!!

நமக்காக நாம் வாழ வேண்டும் என்று பார்த்தாலும் நம்முடைய வாழ்க்கையில் 90% மற்றவர்களுக்காக தான் நடக்கின்றது என்ற உண்மையை நீங்கள் அறிய வேண் டும்.

நாம் நம் குடும்பத்திற்க்காக உழைக்கிறோம் என் பது நமக்கு தெரியும் ஆனால் நாம் மற்றவர்களின் தேவையை பூர்த்தி செய்வதில்தான் அதிக நேரம் ஈடுப டுகிறோம் என்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். ஒரு தொழிலோ அல்லது வேலையோ அதைத்தான் செய்கி றது. அதன் மூலம் கிடைக்கும் பணத்தின் மூலம் தான் நாம் நமக்கு தேவையானதை செய்துகொள்கிறோம்.

உங்கள் செயலில் நீங்கள் முழுமையை அடையும் போது அதை பெறுபவர்களும் முழுமையான பயனை அடைகி றார்கள். அதன் மூலம் அவர்கள் அடையும் ஆனந்தம், திருப்தி எல்லாமே உங்களிடம் பல மடங்காக திரும்பி வரும் என்பதை நீங்கள் அறிய வேண்டும்.

நாம் செய்யும் வேலைக்கான வெகுமதி பணம் மட்டும் அல்ல, நல்ல உணர்வுகளும் தான் என்பதை நீங்கள்

அறியும் போது உங்கள் வாழ்க்கை செல்வச்செழிப்பாக தொடங்கும். இதை தான் பெரியவர்கள் புண்ணியத்தை யும் சேர்க்க வேண்டும் என்று சொன்னார்கள். இதற்காக நாம் தனியாக எதையும் செய்ய தேவையில்லை. நம் வேலையை மனநிறைவோடு செய்தலே போதுமானது.

ஒவ்வொருவரும் தன்னை செம்மைப்படுத்தி வாழ கற் றுக்கொள்ளும் போது இந்த உலகமே செம்மையாகிவி டும் என்பது வாழ்க்கை ரகசியங்களை கற்றுக்கொண்டு அதை மற்றவர்களுக்கும் தெரியப்படுத்த விரும்பிய மாம னிதர்களின் அடிப்படை எண்ணமாக இருந்தது. இன் றும் இருக்கிறது.

உங்கள் வாழ்க்கை என்பது தனிப்பட்ட ஒன்றல்ல என் பதை நீங்கள் புரிந்துகொள்ளும் போது மற்றவர்களும் நலமுடன் வாழ வேண்டுவதின் அவசியத்தை நீங்கள் புரிந்துகொள்ள முடியும்.

உலகத்தில் உள்ள அணைத்து வாழ்க்கையோடும் நம் வாழ்க்கை ஏதோ ஒரு வகையில் பிணைக்கப்பட்டது தான் என்பதே இங்கு மறுக்கமுடியாத உண்மை. தனித்து வாழ்கிறோம் என்பது மனித மனதின் கற்பனையே! இதை தான் இயற்கையும் நமக்கு பறைசாற்றுகிறது.

ஒரு மனதின் ஆசையை பல மனங்கள் இணைந்து தான் நிறைவேற்ற முடியும். அதுதான் விதி.

இதை உணர்ந்து நம்மை நாமே பார்த்துக்கொள்ளும் போது உலகமே செல்வச்செழிப்பை உணரும். செல்வச்செழிப்பு என்பது இயற்கையின் இயல்பு. அதை நாம் கிரகித்தாலே போதும் நம் வாழ்க்கையும் செல்வச்செழிப்பை அனுபவிக்கும்.

இயல்பாகவே நாம் அபரிமிதமானவர்கள் தான் என்பதை உணரும் தருணமே, வாழ்க்கை செல்வச்செழிப்பாகும் தருணம்.[2][3]

# அத்தியாயம் 1[4]

## ஈர்ப்பு விதி என்றால்?

புவிஈர்ப்பு விதியை போல இதுவும் நம் வாழ்க்கையை இயக்கிக்கொண்டிருக்கும் ஒரு இயற்க்கை விதி. இன்னும் தெளிவாக சொல்ல வேண்டுமென்றால் நம் உணர்வுகளுக்கு ஏற்றவாறு நம் சூழ்நிலைகளை உருவாக்குவது இந்த விதிதான்.

இதற்க்கு முன் நீங்கள் இதை பற்றி அறிந்துகொண்டிருக்கலாம் அல்லது அறியாமலும் இருக்கலாம் ஆனாலும் கூட  இது நம் வாழ்வில் இயங்கிக்கொண்டே தான் இருக்கிறது. ஒரு கணம் கூட நிற்பதில்லை.

நம் வாழ்க்கை இதன் அடிப்படையில் தான் நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்பதற்கு உங்கள் வாழ்விலேயே நிறைய அனுபவங்கள் இருக்கின்றன அதை என்னவென்று ஒவ்வொன்றாக பார்ப்போம்.

நீங்கள் "நான் இது இப்படித்தான் நினைத்தேன் அது அப்படியே நடந்துவிட்டது" என்று பலமுறை சொல்லியிருக்கலாம் நினைவுபடுத்தி பாருங்கள். அப்போதெல்லாம் நமக்கு ஒரு கேள்வி தோன்றியிருக்கலாம் "நான்

நினைத்ததால் இது நடந்ததா இல்லை நடக்கப்போவதால் நான் நினைத்தேனா?" என்று. அதேபோன்று "எது நடக்கக்கூடாது என்று நினைத்தேனோ அதுவே நடந்துவிட்டது" என்று நீங்கள் பலமுறை புலம்பியிருக்கலாம். இவையெல்லாம் ஏன் நடந்தது எதற்க்காக நடந்தது என்று இன்று வரை உங்களுக்கு புரியாமல் இருக்கலாம். இதற்கெல்லாம் பதில் இந்த இயற்க்கை(ஈர்ப்பு) விதி தான்.

"நல்லதை தான் நினைத்தேன் ஆனால் எனக்கு மட்டும் ஏன் இப்படி நடக்கிறது" என்று புலம்பாதவர்கள் இல்லையென்றே சொல்லலாம். அப்படியென்றால் இங்கே உண்மையில் என்னதான் நடக்கிறது?

கடுமையாக உழைத்தும் நேர்மையாக இருந்தும் முழுமையான பலனை அடையமுடியாமல் நீங்கள் வருந்தியிருக்கக்கூடும். ஆனால் ஒரு சிலர் மிக எளிமையாக ஏதும் செய்யாமல் அந்த பலனை அனுபவித்துக்கொண்டிருப்பதை நீங்கள் பார்த்திருக்க கூடும். கடவுளையும் திட்டி தீர்த்திருப்போம். இந்த உலகம் வஞ்சகர்களுக்கும், ஏமாற்றி பிழைப்பவர்களுக்கு மட்டும் தான் சொந்தம் என்று புலம்பி வாழ்வின் மீது இருந்த பிடிப்பையே விட்டவர்களையும் நீங்கள் பார்த்திருக்க கூடும்.

மற்றவர்களை பார்த்து, அவர்கள் புண்ணியம் செய்தவர்கள் அதனால் அவர்களுக்கு எல்லாம் நல்லபடியாக

நடக்கிறது என்று பலரும் சொல்வதை நீங்கள் கேட்டி ருக்கலாம்.

ஏன்? உங்களுக்கே கூட அப்படி தோன்றியிருக்கலாம். அப்படியென்றால் வாழ்க்கையை போராட்டத்தில் சிக்கி தவித்து கொண்டிருப்பவர்கள் எல்லாம் பாவம் செய்த வர்களா அவர்கள் வாழ்வில் விமோச்சனம் கிடையாதா? என்று வாழ்வை பற்றி நீங்கள் கொண்டிருக்கும் புதிரான கேள்விகளுக்கெல்லாம் இந்த ஈர்ப்பு விதி தான் விடை..

**ஆம். இதுதான் உங்கள் வாழ்க்கை சக்கரம் இயங்கும் மையப்புள்ளி.**

ஈர்ப்பு விதி தான் விடை என்றால் அது எப்படி விடையா கிறது என்பதை இனி பார்ப்போம்.

ஈர்ப்பு விதி செயல்பட துவங்கும் ஆரம்ப புள்ளி நம் எண் ணங்கள் தான். ஈர்ப்பு விதி என்பது நீங்கள் தற்போது எதைப்பற்றி சிந்தித்து கொண்டிருக்கிறீர்களோ அதே அலைவரிசையில் உள்ள எண்ணங்களை ஈர்த்து அந்த சிந்தனை வட்டத்தை பெரிதாக்கும்.

அந்த சிந்தனை வட்டம் உங்களுக்குள் அதை சார்ந்த உணர்வுகளை உருவாக்கும். ஒவ்வொரு சிந்தனைக் கும் அதை சார்ந்த ஒரு உணர்வு நிலை உண்டு. இன் னும் தெளிவாக சொன்னால் ஒவ்வொரு உணர்வுக்

கும் நாம் ஒரு பெயரை கொடுத்தோம். உதாரணத்திற்கு, உங்களுக்குள் இனிமையை தருகின்ற ஒரு உணர்வு நிலை உள்ளது என்றால் அதை குறிப்பிட சந்தோசம் என்று பெயரிட்டோம்.

உணர்வுகளை வெளிப்படுத்தும் முயற்சியில் தான் மொழி பிறந்தது. அதனால் எண்ணத்தையும் உணர்வை யும் பிரிக்க முடியாது. நீங்கள் எதை சிந்திக்கிறீர்களோ அதை உணர்வீர்கள்.

இப்பொழுதுஅந்த சிந்தனை வட்டத்தினால் ஏற்பட்ட உணர்வுநிலை அதே அலைவரிசையில் உள்ள உணர் வுகளை ஈர்க்கும்.

இதைத்தான் நம் முன்னோர்கள் "பட்ட
காலிலே படும், கெட்ட குடியே கெடும்" என்று
வேடிக்கையாக சொல்வதுண்டு

அதே உணர்வு நிலை மீண்டும் நீங்கள் அனுபவிக்க வேண்டுமென்றால் ஒரு சூழ்நிலை தேவை. அதனால் அந்த உணர்வை உருவாக்கும் சூழ்நிலை உருவாக்கப் படுகிறது. இந்த சூழ்நிலைகளை கண்டு நாம் மீண் டும் ஒரு சிந்தனையை உருவாக்குவோம் மீண்டும் இந்த

சுழற்சி நடைபெறும். இப்படித்தான் நம் வாழ்க்கையை அனுபவித்து கொண்டிருக்கிறோம்.

இதை இன்னும் எளிமையாக புரிந்துகொள்ள ஒரு கதையை பார்ப்போம்... இந்த கதை உங்களை செல்வச் செழிப்பை அடையும் சூட்சமங்களை சொல்லும்.

குரு ஒரு எலெக்ட்ரிக் வேலை செய்யும் ஒரு கூலி தொழி லாளி. அவர் அன்றாட வாழ்க்கையை கடத்துவதே பெரிய விஷயமாக இருந்தது. அவர் குடும்ப தேவை களுக்கு தேவையான பணத்தை சம்பாதிப்பது தான் அவரது நோக்கம்.

நல்லவர், நேர்மையானவர், வேலையில் நல்ல திறமை கொண்டவர் என்றாலும் அவருக்கு வேலைகள் அவ் வளவாக கிடைக்கவில்லை. ஒரு நேரம் கிடைத்த வேலையை செய்வார், ஒரு நேரம் சம்பளத்துக்கு சென்று விடுவார் இப்படியே அவர் வாழ்க்கை போய்க்கொண்டி ருந்தது.

நான் ஒரு நாள் என் சகோதரர் ஒருவரை சந்திக்க அவரது அலுவலகம் சென்றேன். அப்போது குருவும் அங்கிருந்தார். அந்த சகோதரரும் ,குருவும் நெருங்கிய நண்பர்கள்.

நான் சகோதரரோடு பேசிக்கொண்டிருந்தபோது குரு வும் அதை கவனித்துக்கொண்டே இருந்தார். அப்போது

என் சகோதரர் குருவை எனக்கு அறிமுகப்படுத்திவிட்டு அவரின் சூழ்நிலையை பற்றியும் எடுத்துரைத்தார். அவருக்கு உன்னால் ஏதாவது உதவ முடியுமா என்று கேட்டார். என் சகோதரருக்கும் எண்ணங்கள் பற்றியும் அதன் விளைவுகள் பற்றியும் தெரியும் என்பதால் அதை குருவுக்கு புரியும்படி எடுத்துரைக்க சொன்னார்.

நானும் நிச்சயமாக செய்கிறேன் என்று சொல்லி குருவை தனியாக அழைத்துக்கொண்டு ஒரு தேநீர் விடுதிக்கு சென்றேன்.

எங்கள் விரிவான அறிமுக உரையாடலுக்கு பிறகு... பிரதான உரையாடல் துவங்கியது.

குருவிடம் "எண்ணங்கள் தான் உங்கள் வாழ்க்கையை தீர்மானிக்கிறது" என்று சொன்னேன். அவர் சிரிக்க ஆரம்பித்துவிட்டார். "எதற்காக சிரிக்கிறீர்கள்" என்று கொஞ்சம் கடுமையாகத்தான் கேட்டேன். உடனே தன் சிரிப்பை அடக்கிக்கொண்டு விசயத்திற்குள் வந்தார்.

"இல்லை, நீங்கள் சொல்வது வேடிக்கையாக இருக்கிறது, நான் கஷ்டப்பட வேண்டும் என்று ஒருநாளும் நினைத்ததில்லை, ஆனாலும் நான் கஷ்டப்பட்டுக் கொண்டு தான் இருக்கிறேன். அப்படி இருக்கும்போது நீங்கள் சொல்வது எனக்கு வேதனையிலும் சிரிப்பை தான் வரவைக்கிறது" என்றார் குரு.

"நாம் இப்பொழுதுபேச ஆரம்பித்திருக்கும் விஷயம் உங்கள் வாழ்க்கையை மாற்றக்கூடியது என்பதால் நீங்கள்

அதை முழுமையாக கவனிக்க வேண்டும் என்பதற்காக தான் நான் கடுமையாக அப்படி கேட்டேன். உங்களின் நிலை எனக்கு நன்றாக புரிகிறது. இதற்கு என்ன தீர்வு என்பதும் எனக்கு தெரியும். உங்களுக்கு நம்பிக்கை இருந்தால் நான் சொல்வதை ஒரு மாதம் வெறுமனே முயற்சித்து பாருங்கள். பிறகு நாம் இதை பற்றி இன்னும் விரிவாக பேசுவோம்" என்று கூறினேன்.

அதற்க்கு அவர், "என் மீது அக்கறை கொண்டு நீங்கள் சொல்லும்போது அதை முயற்சித்து பார்ப்பதில் எனக் கொன்றும் சிரமம் இல்லை அதிலும் என் வாழ்க்கையை மாற்றும் என்கிறீர்கள் அதை நான் சந்தோசமாக செய்கி றேன். என்ன செய்ய வேண்டும்? என்று கூறுங்கள்" என் றார்.

"உங்களுக்கு என்ன தேவை என்பதை பற்றி நீங்கள் சிந் தித்ததுண்டா?" என்றதற்கு.

"சிந்தித்திருக்கிறேன்!" என்றார்

"எப்படி சிந்தித்தீர்கள்?" என்றதற்கு.

"எப்படி என்றால்?, மாதம் எனக்கு இவ்வளவு பணம் வேண்டும் அதை எப்படி சம்பாதிப்பது அதற்க்கு என்ன செய்ய வேண்டும் என்று சிந்தித்து இருக்கிறேன்." என் றார்.

“எல்லோரும் அப்படி தான் சிந்திக்கிறோம். ஆனால் அப்படி சிந்திப்பதனால் பலனை அடைவது மேலும் சிரமத்தை ஏற்படுத்தக்கூடும்” என்றேன்

“அப்படியென்றால் எப்படி சிந்திக்க வேண்டும்?” என்றார்.

“எப்படி அடையவேண்டும் என்பதற்கு பதிலாக, அதை அடைந்தால் எப்படி இருக்கும் என்று சிந்திக்க வேண்டும்” என்றேன்.

“எனக்கு தேவையான பணத்தை அடைந்தால் எப்படி இருக்கும் என்று பார்த்தால், உட்சபட்ச சந்தோசம் இருக்கும்” என்று சொல்லும்போதே அவர் முகத்தில் ஆனந்தம் பெருக்கெடுத்தது.

அவர் அந்த சிந்தனையில் மூழ்கிவிட்டதையும் உணர்ந்தேன்.

“நினைக்க நினைக்க சந்தோசமாக இருக்கிறது” என்றார் உற்சாகமாக!

“இதற்க்கு முன் நீங்கள் இதை எத்தனை முறை அனுபவித்தீர்கள்?” என்றதற்கு

“அனுபவித்ததே இல்லை என்று தான் நினைக்கிறன்” என்றார்.

“பரவாயில்லை, இனி இதை செய்யுங்கள்!” என்றேன்.

“இப்படி சிந்தித்தால் என் வாழ்க்கை மாறுமா? என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை” என்றார்.

“முடியாது தான்! நீங்கள் நம்ப வேண்டிய அவசியமும் இல்லை. ஆனால் ஒரு முறை முயற்சித்து பாருங்கள். உண்மை என்னவென்று நீங்களே அறிந்துகொள்வீர் கள்” என்றேன்.

“சரி, நான் என்ன செய்ய வேண்டும்?” என்றார்.[5]

“தினமும் காலையில் நீங்கள் எழுந்தவுடன் ஒரு அரை மணி நேரம் ஒதுக்கி நீங்கள் நினைத்தபடி உங்கள் வாழ்க்கை நடந்தால் எப்படி இருக்கும் என்று சிந்தித்து பாருங்கள்.

உதாரணத்திற்கு, நல்ல லாபம் தரும் வேலை கிடைத் தால் எப்படி இருக்கும், நிறைய பணம் கிடைத்தால் எப் படி இருக்கும் என்று சிந்தித்து பாருங்கள்.

ஆனால் அந்த பணத்தின் அளவு, வேலையின் அளவு நீங்கள் நம்பும்படியாக இருக்க வேண்டும்.

ஏனென்றால், பத்தாயிரம் சம்பாதிப்பவர் பத்து லட்சம் பற்றி கனவு கண்டால் மனம் அது பொய் என்று சொல்லி நிராகரித்து விடும். அதனால் உங்கள் சிந்தனைகள் நீங் கள் நம்பும்படியாக இருக்கட்டும்.[6]

வேறு எதுவும் செய்ய வேண்டாம், சிந்தித்து மட்டும் பாருங்கள். ஒரு நாள் கூட தவற விட்டு விடாதீர்கள்" என்று கூறினேன்.

அதற்க்கு அவர், "செய்து பார்க்கிறேன் அடுத்த மாதம் உங்களை சந்திக்கிறேன்" என்று கூறி விடை பெற்றுக் கொண்டார்.

முதன் முறையாக நம் வாழ்க்கை எளிமையானது என் பதை நாம் அறியும்போது அதை ஏற்றுக்கொள்வது என் பது தான் மிகவும் கடினமான ஒன்று.

திறந்த மனதோடு நாம் ஒரு முறையேனும் இதை முயற் சித்து பார்த்தால் இயற்க்கை நம் வாழ்க்கையில் பல அற்புதங்களை செய்யும். ஆனால் நாம் அனுமதித்தாக வேண்டும்.

அனுமதிக்காவிட்டால் இயற்கையே ஆயினும் ஒன்றும் செய்ய இயலாது என்பதுதான் நிதர்சனமான உண்மை. [7]

அவர் வாழ்வில் அற்புதங்களை அவர் அனுமதிக்க அவ ருக்கு அருள் செய்வாய் என்று பிரபஞ்சத்திடம் வேண் டிக்கொண்டேன்.

அடுத்த மாதம் சந்திப்பிற்காக காத்திருந்தேன்.[8]

அத்தியாயம் 2 [9]

# மனம் என்றால்?

மனம் என்றால்? - இந்த கேள்விக்கான உங்களுடைய பதில் என்ன? அதை பற்றி நீங்கள் அறிந்து வைத்திருப்பதென்ன? உங்கள் மனம் எப்படி வேலை செய்கின்றது என்று உங்களுக்கு தெரியுமா? - இந்த கேள்விகள் அனைத்திற்கும் உங்கள் மனதில் விடை தேடுங்கள்.

வேடிக்கையாக உள்ளதல்லவா? மனதை பற்றி அறியவும் மனதில் தான் விடை தேடியாக வேண்டும் என்பது?

மனம் தான் நம் வாழ்க்கையை வடிவமைக்க நம்மிடம் இருக்கும் ஒரே கருவி. அதனை கையாள்வது எப்படி என்பதை உணர்ந்தால் மட்டுமே நீங்கள் உங்கள் வாழ்க்கையை உருவாக்க முடியும்.

குருவுக்கு எந்த அளவு தன் மனதை பற்றி தெரியும் என்பதை தெரிந்துகொண்ட பிறகு தான் அவருக்கு என்னால் ஆன உதவிகளை செய்ய முடியும். அடுத்த சந்திப்பில் அவரிடம் இதை பற்றி பேசியாக வேண்டும் என்று முடிவு செய்தேன்.

---

*நீங்கள் மனதை பற்றி என்ன அறிந்து வைத்துள்ளீர்கள் என்பதையும் கவனித்து பாருங்கள்.*

--- [10]

ஒரு மாதம் கழித்து அவர் என்னை தொலைபேசி யில் அழைத்து முன்னர் சந்தித்த அதே தேனீர் விடு திக்கு வரும்படி கேட்டுக்கொண்டார். நானும் அவர் வாழ்வில் என்ன நிகழ்ந்திருக்கும், அதனால் அவர் என்ன உணர்ந்திருப்பார் என்பதை அறியும் ஆவலோடு அவரை காண புறப்பட்டு சென்றேன்.

தேநீர் விடுதியில் காத்திருந்தேன். அவரும் புன்னகை நிறைந்த முகத்தோடு வந்தார். அவர் முகபொழிவே அவர் வாழ்வில் மாற்றம் ஆரம்பமானதை எனக்கு உணர்த்தியது.

என் முன்னே வந்து அமர்ந்த அவர், “நீங்கள் கூறியது சரி தான் என்பதை இப்பொழுதுஒப்புக்கொள்கிறேன்” என் றார்.

“நீங்கள் முதலில் என்ன செய்தீர்கள்? அதற்க்கு என்ன நடந்தது?! என்று விரிவாக கூறுங்கள்” என்றேன்.

“முதலில் நீங்கள் சொன்னதை நான் பெரிதாக கருத வில்லை என்றாலும் முயற்சித்து பார்ப்போம் என்ற எண் ணம் இருந்துகொண்டே இருந்தது.

அதனால் மறுநாள் காலையில் ஒரு காகிதத்தை எடுத்து எனக்கு தற்பொழுது நடக்க வேண்டிய விஷயங்கள் என்ன என்பதை எல்லாம் பட்டியலிட்டேன். நான் கவ னிக்காத ஆனால் கவனிக்க வேண்டிய நிறைய விஷயங் கள் அந்த பட்டியலில் இடம்பிடித்தது.[11]

பட்டியலிட்டு முடித்தவுடனேயே ஏதோ பாரம் குறைந்தது போல் உணர்ந்தேன். அது கொஞ்சம் நிம்மதியை தந் தது.

பிறகு, நடந்தால் எப்படி இருக்கும் என்ற கேள்வியை கேட்டபோது ஒரு உற்சாகத்தை உணர்ந்தேன். எப்படி இருக்கும் என்பதை நினைக்க நினைக்க சந்தோசம் பெருகிக்கொண்டே இருந்தது. நடக்குமா இல்லையா என்று தெரியாது ஆனாலும் இந்த சந்தோஷத்திற்க்கா கவே இதை தினமும் செய்ய வேண்டும் என்று தோன்றி யது.

ஆனால் அடுத்தநாள் சந்தோசமாக இருந்தாலும் முதல் நாள் போல் இல்லை அதோடு பல சந்தேகங்களும் கேள்விகளும் வந்தது. கொஞ்சம் கவலையாக இருந் தது.

பிறகு, இது கற்பனை தானே எதற்காக இவ்வளவு சிந் திக்க வேண்டும் என்று தோன்றியதால் முழுமையாக அனுபவித்தேன். சந்தோசம் தினம் தினம் காலையில் நல்ல உணர்வை தந்தது. இந்த மகிழ்ச்சியே போதும் என்று இருந்தேன்.

20 நாட்கள் இதேபோல் தினமும் காலையில் இதை செய்து சந்தோஷப்பட்டேன். ஆனால் ஆச்சர்யம், அதன் பிறகு தான் அனுபவமாக வர தொடங்கியது. புதிய ஆட் கள் அறிமுகம் கிடைத்தது, வேலைகளும் வர தொடங் கின.

பண புழக்கம் சற்று அதிகரித்தது. இவை அனைத் திற்கும் இது தான் காரணமா?! என்பதை ஏற்கவும் முடியவில்லை. ஆனால் அதே நேரம் இதை செய்த பின் தானே இவையெல்லாம் நடக்கிறது என்பதையும் மறுக்க முடியவில்லை!.

பெரிய மாற்றங்கள் இல்லை என்றாலும் மாற்றம் இருக் கிறது. இப்பொழுது நான் அதிகமாக புலம்புவதில்லை. விஷயங்கள் எனக்கு சாதகமாக நடக்கும் என்று ஒரு நம் பிக்கை வந்திருக்கிறது. இதெல்லாம் ஏதோ கண்கட்டு வித்தை போல் இருந்தாலும் நான் இப்பொழுது இதை அனுபவித்து கொண்டிருக்கிறேன்" என்று மிகவும் சந் தோசமாக கூறினார். நன்றியும் கூறினார்.

“நான் சிந்தித்தால் நடக்கும் என்பது எனக்கு கொஞ்சம் வேடிக்கையாக இருக்கிறது அனுபவித்தாலும் கூட. இதை இன்னும் கொஞ்சம் விளக்க முடியுமா?” என்றார்

“நிச்சயமாக சொல்கிறேன்! உங்களுக்கு மனதை பற்றி என்ன தெரியும்?” என்றதற்கு

சிறிது நேரம் சிந்தித்து விட்டு...

“மனம் என்றால், சிந்தனைகள்[12] மற்றும் குணாதிசயங்கள் இருக்கும் இடம் என்று நினைக்கிறன்” என்றார்

“நல்லது! மனம் என்பது நம் வாழ்க்கை இயங்க தேவையான அடிப்படை கருவி என்று தான் சொல்ல வேண்டும். அதில் பல பரிமாணங்கள் உள்ளன. அதை பற்றி ஒரு முழுமையான விளக்கம் என்ன என்று அறிவியல் உலகம் இன்றும் தேடிக்கொண்டு தான் இருக்கிறது.

மெய்ஞான உலகம் அதை பற்றி கூறும் விளக்கம் நம் அனுபவத்திற்கும் அப்பாற்பட்டதாக உள்ளது. மிகவும் ஆழமாக போக வேண்டாம் என்று எண்ணுகிறேன்.

நாம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், மனதின் செயலை பொறுத்தே நம் வாழ்க்கை நிகழ்கிறது என்பதை தான்.” என்றேன்

“என்ன செயல்? கொஞ்சம் விளக்கமாக கூறுங்கள்” என்றார்.

"நாம் ஒரு செயலை செய்யும் முன் முதலில் அது நம் மன தில் எண்ணமாக தான் தோன்றும். இல்லையா?"

"ஆம்"

"ஒரு எண்ணம் மேலும் தெளிவை பெற பல எண்ணங்க ளாக மாறும். அதை சிந்தனை என்கிறோம்.

அந்த சிந்தனை முழுமையான தெளிவை பெறும்போது முடிவாக மாறும்.

அந்த முடிவு செயலை தூண்டும். அதை தொடர்ந்து தான் நாம் செயல்களை செய்கிறோம். அந்த செயல்க ளால் நாம் விளைவுகளை அடைகிறோம்." என்றதும்

"அந்த விளைவுகளால் தான் சூழ்நிலை உருவாகிறது. அவை தான் வாழ்க்கையாக மாறுகிறது. சரி தானே!" என்றார்

அவரின் புரிந்துகொள்ளும் திறன் என்னை வியக்க வைத்தது. ஏனென்றால், அடிப்படை படிப்பறிவு கூட இல்லாத மனிதர் அவர். படிப்புக்கும் அறிவுக்கும் என்ன சம்பந்தம் என்று கேள்வி எழுப்புகிறார் என்று சிந்தித்து கொண்டே

"சரியாக சொன்னீர்கள்! இப்பொழுது உங்களுக்கு மன தின் செயல் புரிகிறதல்லவா?" என்றதற்கு

"ஆம்! ஆனால் எனக்கு ஒரு சந்தேகம்?" என்றார்

“கேளுங்கள்”

“நான் ஒன்றை செய்ய வேண்டும் என்று சிந்தித்து அதை செய்து முடிக்கிறேன் என்பது சரி. ஆனால், நான் வெறு மனே சிந்தித்த ஒரு விஷயம் நடக்க தொடங்கியது எப் படி?” என்றார்

“அந்த ரகசியத்தைத்தான் நாம் கற்றுக்கொள்ள போகி றோம். அது உங்கள் உணர்வுகள் பற்றியது!”

“என்ன ரகசியம்! கொஞ்சம் விளக்கமாக” என்றார்

“நீங்கள் ஒன்றை இருப்பது போல் உணர்ந்தால் அது உருவாகும் என்பது தான் அது” என்றேன்

“அப்படியென்றால், எனக்கு தேவையான வேலைகள் கிடைத்தால் என் வாழ்க்கை எப்படி இருக்கும் அதாவது என்னிடம் இல்லாத ஒன்று இருந்தால் எப்படி இருக்கும் என்று நான் சிந்தித்ததால் இது நடக்க தொடங்கியது என்கிறீர்கள்” என்றார்

“ஆம்”

“நம்பவும் முடியவில்லை, நம்பாமல் இருக்கவும் முடிய வில்லை. ஆச்சர்யமாக உள்ளது” என்றார்.

“இப்பொழுதுநீங்கள் அனுபவிப்பது ஒரு சிறிய ஆரம்ப நிலை மாற்றம் தான். இதன் மூலம் நீங்கள் உங்களுக்கு தேவையானதை எல்லாம் உருவாக்கிக்கொள்ள முடி யும். இதன் மூலம் மட்டும் தான் முடியும்.” என்றேன்.

ஆனால் இதை நீங்கள் முதன்முறையாக அனுபவிப் பதால் இந்த அளவு அது உங்களுக்கு உற்சாகத்தை அதேநேரம் ஆச்சர்யத்தையும், சந்தேகத்தையும் தந் துள்ளது.

உண்மை என்னவென்றால் இது ஒன்றும் உங்களுக்கு புதிதாக வேலை செய்யவில்லை. இது ஒரு இயற்க்கை விதி. இந்த உலகம் பிறந்ததில் இருந்து இன்று வரை இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு இயற்க்கை விதி. இந்த இயற்க்கை விதியை ஈர்ப்பு விதி என்று கூறுவோம்

இதை தான் நம் முன்னோர்கள் **"எல்லாம் விதி படிதான் நடக்கும்"** என்று கூறினார்கள். ஆனால் நாம் அதை தவறாக புரிந்துகொண்டோம். இதுவரை அதைப்பற்றிய விழிப்புணர்வு இல்லாமல் வாழ்வை நடத் தியதால் நாம் சிரமப்பட்டோம். அதோடு இணைந்து அதற்கேற்றாற்போல் வாழ துவங்கியதும் நமக்கு தேவை யானது எல்லாம் நம்மை நோக்கி வர தொடங்கி விட்டது.

இந்த விதியின் சாராம்சம் என்னவென்றால்,

**நீங்கள் எதைப்பற்றி சிந்திக்கிறீர்களோ அல்லது உணர்கிறீர்களோ அதையே மறுபடியும் உங்களிடம் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பது தான்.**

இந்த விதியை பற்றி நாம் அதிகமாக சிந்திக்க வேண் டிய அவசியமில்லை, அதை தெரிந்து வைத்துக்கொண்

டால் மட்டும் போதும். அது எப்போதும் சரியாக வேலை செய்யும். நாம் செய்ய வேண்டியது என்னவென்றால் நம் எண்ணங்களின் மீது கவனம் கொண்டு அதை சரியாக தேர்ந்தெடுப்பது மட்டுமே!

இது கேட்க எளிமையாக இருந்தாலும் அதை ஏற்றுக் கொண்டு செய்து காட்டுவது என்பது அத்தனை சுலப மான விஷயம் அல்ல. அதிலும் முக்கியமாக வறுமையின் பிடியில் இருக்கும் போது கொஞ்சம் கடினமே! ஆனா லும் நாம் இதை கொண்டு செல்வச்செழிப்பை அடைய முடியும்" என்று கூறினேன்.

இதை கவனிப்பாக கேட்டுக்கொண்டிருந்த குரு, "எனக்கு இதை பற்றி இன்னும் ஆழமாக புரிந்துகொள்ள வேண்டும் என்று ஆசையாக உள்ளது. நீங்கள் தான் அதற்க்கு உதவ வேண்டும்" என்றார்.

நானும் "நிச்சயமாக!" என்று கூறி, "இப்பொழுது நீங் கள் அனுபவித்த விஷயங்களை கொண்டு உங்களுக்கு ஏதாவது கேள்வி எழுந்துள்ளதா?" என்று கேட்டேன்.

அதற்க்கு அவர், "கேள்விகள் இல்லை ஆனால் ஆச் சர்யம் நிறைய உள்ளது, அதிலும் நம்பமுடியாத ஆச் சர்யங்களாக இருக்கின்றன. இதை கொண்டு பெரிய கோடீஸ்வரனாக ஆக வேண்டும் என்ற பேராசை உரு வாகியுள்ளது. ஆனால் முடியுமா என்று தான் தெரிய வில்லை. எனெக்கெல்லாம் கோடீஸ்வரனாக வாழும்

பாக்கியம் கிடைக்குமா என்பது சந்தேகமே" என்று கூறி பெருமூச்சு விட்டார்.

அவரின் வார்த்தைகளும் சரிதான் என்று தோன்றி யது. ஏனென்றால், இதுவரை போராட்டமான வாழ்க்கை வாழ்ந்த ஒருவரிடம் திடீரென்று போய் உங்களால் எதை வேண்டுமென்றாலும் அடைய முடியும் என்று சொன் னால் அவரால் அதை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும். அங்கே சந்தேகம் வருவது நியாயம் தானே.

ஆனாலும் அதை அவரிடம் வெளிக்காட்டிக்கொள்ளா மல், **"உங்களால் முடியுமா முடியாத என்பதை முயற் சித்து பார்த்து தெரிந்துகொள்ளுங்கள்"** என்றேன்.

அவரும் "சரி" என்று தலையசைத்துவிட்டு அடுத்து நான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார்.

"இதுவரை செய்ததையே தொடர்ந்து செய்யுங்கள் தற் போதைக்கு இது போதும். ஆனால் முன்பு செய்தது போல் சிந்திப்பது மட்டுமே உங்கள் செயலாக இருக்க வேண்டும்.

எப்போது நடக்கும், அடுத்து என்ன நடக்கும் என்ற எதிர் பார்ப்பும் அவசரமும் உங்கள் விளைவை தள்ளிப்போ டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்" என்றேன்.

"வேறு எதுவும் செய்ய தேவையில்லையா?!" என்று சோகமாக கேட்டார்.

அவரின் ஆர்வம் திருப்தி அடையாமல் போன அந்த சோகம் அவர்களின் கண்களில் தெளிவாக தெரிந்தது.

நான் அவரின் கைகளை பிடித்து, "உங்களின் ஆர்வம் எனக்கு புரிகிறது. ஆனால் நீங்கள் உண்மையான மாற் றத்தை அனுபவிக்க வேண்டும் என்று நான் விரும்புகி றேன். படிப்படியாக உங்கள் தேவைகளை பூர்த்தி செய் வோம் அதே நேரத்தில் வாழ்வதற்கான சுலபமான வழி யையும் கற்றுக்கொள்வோம்" என்றேன்.

அவரும் புன்சிரிப்போடு, "சரி நான் இதையே தொடர்ந்து செய்கிறேன், அடுத்து நான் எப்போது உங்களை சந்திக் கலாம்" என்று கேட்டார்.

"15 நாட்களுக்கு பிறகு இதே இடத்தில் சந்திப்போம். அப்போது பணத்தின் அடிப்படை என்ன என்பதையும் அது எப்படி செயல்படுகிறது என்பதையும் நாம் பேசு வோம் என்றேன். அது வரை நீங்கள் உங்கள் அனுப வத்தில் பணத்தை பற்றிய முக்கியமான விஷயங்களை தெளிவுபடுத்தி வையுங்கள்" என்றேன்.

அவரும் ஆமோதித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டு சென்றார்.

நாம் ஒன்றை அடைய வேண்டும் என்று முடிவுசெய் தால் அதை பற்றி ஆழமாக தெரிந்துகொள்வது அவசி யம் தானே! அப்போதுதான் நம்மால் அதை சுலபமாக அடைய வழிகள் கண்டுபிடிக்க உதவியாக இருக்கும்.

எந்த திசையில் போக வேண்டும் என்பதும் அப்போது தான் நமக்கு புரியும்.

ஆழமான புரிதல்கள் தான் மாற்றத்தின் அடிப்படை.[13]

இதை பற்றி தான் அடுத்த சந்திப்பில் அவருடன் கலந்து ரையாட வேண்டும் என்று முடிவு செய்துகொண்டு அங் கிருந்து கிளம்பினேன்.

நீங்களும் என்னோடு வாருங்கள் அடுத்த சந்திப்பில் என்ன நடந்தது என்பதை  அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.[14]

அத்தியாயம் 3

# பணம் என்றால்?

இது என்ன கேள்வி? - பணம் என்றால் என்னவென்று எங்களுக்கு தெரியாதா? என்று தோன்றலாம். குருவுடனான இந்த சந்திப்பு உங்களுக்கு நிச்சயம் புதிய புரிதலை ஏற்படுத்தலாம்.

15 வது நாள் காலையில் குருவிடம் இருந்து தொலைபேசி அழைப்பு வந்தது. எப்போது சந்திக்க போகிறோம் என்பதை பேசி உறுதிப்படுத்திக்கொண்டோம். பேசும் போது அவரின் குரல் மிகவும் சந்தோசமாக இருந்ததை கேட்டபோது எனக்கு மிகவும் ஆனந்தமானது.

மாலை நேரம் நான் அந்த தேநீர் விடுதிக்குள் நுழைந்தபோது அவர் எனக்கு முன்பே வந்து அமர்ந்திருந்தார். இருவருக்கும் தேநீர் சொல்லிவிட்டு நான் அவர் அருகில் சென்று அமர்ந்தேன்.

குரு புன்னகைத்துக்கொண்டே "உங்களிடம் ஒரு சந்தோசமான விஷயத்தை சொல்ல வேண்டும்" என்றார்.

"நானும் அதற்காகத்தான் காத்திருக்கிறேன், கூறுங்கள்" என்றேன்.

“இதுவரை நான் மட்டுமே வேலை செய்துகொண்டிருந்தேன். எனக்கு வரும் வேலைகளும் சிறியது என்பதால் நானே எல்லா வேலைகளும் பார்ப்பேன் என்பது உங்களுக்கு தெரியும். ஆனால் ஒரு வாரத்திற்கு முன்பு ஒரு அதிசயம் நடந்தது.” என்றார்

“என்ன அது?” என்றதற்கு

“நான் செய்த ஒரு வேலையை பார்த்துவிட்டு ஒரு கட்டிட காண்ட்ராக்டர் என்னை தொலைபேசியில் அழைத்து தன்னை வந்து சந்திக்கும்படி கூறினார். அவரை பற்றி நான் நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். பெரிய பெரிய கட்டிடங்களை கட்டுபவர் அவர். அவரே என்னை சந்திக்க வேண்டும் என்று அழைத்தது எனக்கு மிகவும் சந்தோசமாக இருந்தது.

அன்று இரவே என் வேலைகளை முடித்துக்கொண்டு அவரை சந்திக்க சென்றேன். அவரிடம் எங்கு வந்து சந்திக்க வேண்டும் என்பதை தொலைபேசியில் கேட்டுக்கொண்டேன். அவர் வீட்டிற்கு வரும்படி கூறி முகவரியும் தந்தார்.

முகவரியை கண்டுபிடித்து அவர் வீட்டு வாசலில் சென்று நின்றேன்.

அவர் வராண்டாவில் அமர்ந்திருந்தார். என்னை பார்த்ததும் புன்னகைத்து உள்ளே வாருங்கள் என்று அழைத்து அமர செய்தார்.

என் வேலை பற்றிய விபரங்களை கேட்டுக்கொண்டு உங்கள் வேலை நன்றாக இருந்தது அதனால் நான் ஒரு சிறிய வேலையை உங்களுக்கு தரலாம் என்றிருக்கிறேன். அதை நீங்கள் நல்லபடியாக முடித்துக்கொடுத்தால் தொடர்ந்து வேலை தருகிறேன் என்றும் கூறினார்.

என் மனம் சந்தோசத்தில் நிரம்பியது. நிச்சயமாக, நன்றாக செய்து தருகிறேன் என்றேன். செய்ய வேண்டிய வேலைகள் பற்றி அவர் கூறியபோது தான் அந்த சிறிய வேலை என்னை பொறுத்த வரை மிகப்பெரிய வேலை என்று தெரிந்தது.

இதை நம்மால் செய்ய முடியுமா என்று கூட சந்தேகம் வந்தது. ஆனாலும் அதை நான் வெளிக்காட்டிக்கொள்ளவில்லை.

அந்த வேலைக்காக ஆகும் பணம் ரூ70,000 என்று கூறினேன் அவரும் சம்மதித்து ரூ40,000 த்தை முன்பணமாக அப்போதே என்னிடம் கொடுத்தார்.

அந்த பணத்தை கையில் வாங்கியபோது என்னை அறியாமல் என் கண்கள் கலங்கின. ஏனென்றால், இது வரை நான் இவ்வளவு பணத்தை ஒரே தொகையாக பார்த்ததில்லை. சந்தோஷத்தில் மனம் துள்ளிக்குதித்தது. சிரித்துக்கொண்டே இருந்தேன் வீடு வந்து சேரும் வரை. என் மனைவியிடம் சொன்னபோது அவளுக்கு ஆச்சர்யம் தாளவில்லை. மிக நீண்ட நாட்களுக்கு பிறகு

சந்தோசமாக இரவு உணவை சாப்பிட்டோம். நிம்மதியாக உறங்கினோம்.

கனவுபோல் இருக்கிறது! ஆனாலும் நடந்தது. இது போன்ற வேலைகள் எல்லாம் எனக்கு கிடைக்குமா? கிடைத்தால் எப்படி இருக்கும் என்று ஒரு வாரம் நான் சிந்தித்து பார்த்தேன். நடக்குமா நடக்காத என்ற கவலை தோன்றவில்லை. சிந்திக்க ஆனந்தமாக இருந் தது. சந்தோசமாக சிந்தித்தேன். அது நிஜமானது" என்று கூறி நன்றியுணர்வில் நிறைந்தார்.

அவரை அந்த அளவு ஆனந்தத்துடன் பார்க்க எனக்கு மிகவும் ஆனந்தமாக இருந்தது.

அவரிடம், "இப்பொழுது உங்களால் ஏற்றுக்கொள்ள முடிகிறதா? உங்கள் சிந்தனைகள் தான் உங்கள் வாழ்வை உருவாக்கி கொண்டிருக்கின்றன என்பதை!" என்று கேட்டபோது வேகமாக தலையசைத்து ஆமோ தித்தார்.

"இதில் உங்களுக்கு அதிக சந்தோசத்தை தந்தது எது? உங்களுக்கு வந்த பணமா? இல்லை, உங்கள் தொழி லின் அடுத்த கட்ட வளர்ச்சியா?" என்று கேட்டேன்.

"இல்லை, இரண்டும் இல்லை. என் வாழ்க்கையை நான் சந்தோசமாக எப்படி அமைத்துக்கொள்வது பற்றி நான் ஏதோ ஒன்றை அறிந்துகொன்டேன். அதை முழுமை யாக கற்றுக்கொள்ள போகிறேன். இனி என் வாழ்க்கை

என் கையில் இருக்கும் என்ற உணர்வு தான் எனக்கு அதிக மகிழ்ச்சியை தருகிறது.

இதுவரை இப்படி ஒன்றை நான் அனுபவித்ததில்லை" என்று கூறும்போதே அவரின் மகிழ்ச்சி எல்லையில்லா மல் இருந்ததை உணர முடிந்தது.

"இன்று நாம் பணத்தை பற்றி பேசப்போகிறோம் என்று கூறினீர்கள், அதை பற்றி நாம் என்ன அறிந்துகொள்ள போகிறோம்" என்று கேட்டார் குரு.

"பணத்தை பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் அதை பற்றி கொஞ்சம் சொல்லுங்கள்" என்று அவரிடம் கேட் டேன்.

"பணம் தான் இன்று எல்லாம், அது இல்லாமல் வாழ்க்கை சுலபமாக இருக்க வாய்ப்பில்லை. ஒவ்வொ ருவரும் அதை சம்பாதிக்க தான் போராடிக்கொண்டி ருக்கிறோம். என்னையும் சேர்த்து! அதை எப்படி சம் பாதிப்பது என்பது பலரும் அறியாத ஒன்று. ஆனால் அதைத்தான் தேடிக்கொண்டும் இருக்கிறோம்.

பணம் அதிகமாக தேவைப்படும் ஒன்று, வேறு இதைப் பற்றி என்ன சொல்வதென்று எனக்கு தெரியவில்லை. எதை செய்ய வேண்டுமென்றாலும் பணம் தேவை, அவ் வளவு தான்" என்று கூறி முடித்தார்.

"நீங்கள் சரியாக சொன்னீர்கள், ஆனால் செல்வச்செ ழிப்பு என்றால் உங்களுக்கு நினைவுக்கு வருவது பணம்

மட்டும்தானே!" என்று கேட்டதற்கு அவரின் மௌனமே பதிலாக வந்தது.

மேலும் தொடர்ந்தேன், "உங்களின் மனதில் பணம் மட்டுமே வாழ்க்கை, அது இருந்தால் என்ன வேண் டுமென்றாலும் செய்துகொள்ளலாம் என்று ஆழமாக பதிந்ததற்கு என்ன காரணம்? அது முழுமையான உண் மையா அப்படி சிந்தித்தல் சரியா? என்ற எண்ணம் உங் களுக்கு என்றாவது தோன்றியதுண்டா?" என்று கேட்ட தற்கு அவர் மிகுந்த சிந்தனையுடன் "இல்லை" என்று பதிலளித்தார்.

"நீங்கள் இதை செய்யாதது குற்றம் என்று நான் சொல்லவில்லை ஆனால் இனியும் நாம் இதைப்பற் றிய தெளிவை ஏற்படுத்திக்கொள்ளாவிட்டால் அதுவே பெரும் குற்றமாகிவிடும். பணத்தின் பின் ஓடியே உங்கள் வாழ்க்கை முழுதும் தீர்ந்து விடும்.

இதைதான் நீங்கள் வாழ்நாள் முழுவதும் செய்ய விரும்பு கிறீர்களா?" என்றதற்கு

"இல்லை" என்றார்

"சந்தோசமாக இருக்க என்ன செய்ய வேண்டும் என்ற தேடலில் உங்களை சுற்றியுள்ள மனிதர்களின் அபிப் ராயங்கள் மற்றும் அவர்களின் சூழல்களை கொண்டு பணம் இருந்தால் நாம் சந்தோசமாக இருக்க முடியும் என்ற முடிவுக்கு வந்துவிட்டோம்.

அடுத்தவரை போல வாழ வேண்டும் என்ற நோக்கத்தில் தான் இன்று நிறைய மக்களின் வாழ்க்கை நகர்ந்து கொண்டிருக்கிறது. அவர்களுக்கு என்ன வேண்டும் அல்லது அவர்களுக்கு என்ன பிடிக்கும் என்பது பற்றிய கவனம் கூட அவர்களுக்கு இருப்பதில்லை.

பணம் சம்பாதிப்பதே நோக்கம் என்றாலும் அதை எப்படி சம்பாதிப்பது என்பதை பற்றிய விவரங்களை எப்போதாவது அந்த துறையில் இருக்கும் வல்லுநர்களிடம் நீங்கள் என்றாவது கேட்டதுண்டா?" என்று கேட்டதற்கு அவரிடம் இல்லை என்ற பதிலே வந்தது.

"பிறகு எப்படி பணம் சம்பாதிப்பது கடினம் என்ற முடிவுக்கு வந்தீர்கள்?" என்று கேட்டதற்கு அவரிடம் பதில் இல்லை.

என்னுடைய இந்த கேள்விகள் அவரை என்னவோ செய்திருந்தது அவர் முகத்தில் தெரிந்தது.

அவருக்காக இன்னொரு கோப்பை தேநீரை வாங்கி வந்து அவரிடம் கொடுத்தபடியே, "இந்த கேள்விகள் எல்லாம் உங்களை காயப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் நான் கேட்கவில்லை இனி நாம் பணத்தை பற்றி பேசப்போகும் விஷயங்கள் உங்களுக்கு எவ்வளவு முக்கியம் என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகவே நான் இதையெல்லாம் கேட்டேன்.

காயங்களுக்கு மன்னிக்கவும்" என்று சொன்னதும் அவர், "அப்படி ஒன்றும் இல்லை, நான் உங்களை எதுவும் நினைக்கவில்லை. ஆனால் இதுநாள் வரை நான் என்ன செய்துகொண்டிருந்தேன் என்ற கேள்வி என்னை என்னவோ செய்துகொண்டிருக்கிறது" என்று மிகவும் வருத்தத்துடன் கூறினார்.

"இது நீங்கள் பெருமைப்பட வேண்டிய தருணம். உங்களுடைய தவறுகளை நீங்கள் ஏற்றுக்கொண்டதே மிகப் பெரிய மாற்றம்.

ஏனெனில், தவறு செய்கிறோம் என்பதை நாம் ஏற்றுக் கொள்ளாதவரை வாழ்வில் எப்போதும் முன்னேற்றம் இல்லை. உங்களுக்கு நீங்களே நன்றி கூற வேண்டிய தருணம் இது" என்றவுடன் கொஞ்சம் நிம்மதியடைந் தார். அது தான் உண்மையும் கூட .

"உங்களுடைய சிந்தனைகளுக்கும் செயல்களுக்கும் முழுமையான பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொள்ளாத வரை நம்மால் நம் வாழ்க்கையை விரும்பும்படி அமைத் துக்கொள்ள முடியாது" என்றேன்.

உடனே அவர் "இப்பொழுது அதற்க்கு நான் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டார்.

நான் சிரித்துக்கொண்டே "இப்பொழுது நீங்கள் செய்ய வேண்டியது ஏதுமில்லை, ஏனெனில் நீங்கள் அதை எப்

போதோ செய்துவிட்டீர்கள் அதனால் தான் நாம் இன்று இங்கே பேசிக்கொண்டிருக்கிறோம்" என்று கூறினேன்.

இதை நான் சொன்னதும் அவர் முகத்தில் அப்படி ஒரு ஆனந்தம். “என்ன ஆயிற்று?!” என்று கேட்டதற்கு, "இது வரை என் வாழ்க்கை இப்படி இருக்க காரணம் என் பெற்றோர்கள் என்றும் என் தலைவிதி என்றும் கிரகங் கள் என்றும் நான் குறைப்பட்டிருக்கிறேன். [15]

அப்படிப்பட்ட நான் தான் இன்று என் வாழ்க்கைக்கு நான் தான் பொறுப்பு என்ற நிலையை அடைந்திருக்கி றேன் என்பதை உணரும் போது பெருமையாக இருக்கி றது" என்று கூறினார்.

நானும் “நிச்சயமாக, இது நீங்கள் பெருமைப்பட வேண் டிய விஷயம் தான். இப்பொழுது நீங்கள் இன்னும் ஆழமான சில உண்மைகளை பற்றி அறிந்துகொள்ள வேண்டும்.

இதற்கு முன் நாம் பேசிக்கொண்டிருந்ததை தான் நாம் இன்னும் ஆழமாகவும், விரிவாகவும் பார்க்க போகி றோம். இது தான் இன்றைய சந்திப்பின் நோக்கமும் கூட” என்றேன்.

"சொல்லுங்கள்" என்று ஆர்வமானார்.

நான் தொடர்ந்தேன்...

"பணம் என்பது மனிதன் கண்டு பிடித்தது தான் என்ற போது அது எப்படி நம்மையே ஆட்டிப்படைக்கும் விஷ

யமாக மாறியது என்று நீங்கள் சிந்தித்ததுண்டா? " என்றேன்.

"இல்லை" என்றார்.

"அப்படியென்றால், செல்வச்செழிப்பின் அடிப்படை நமக்கு புரியவில்லை என்று தானே அர்த்தம்?"

"தெரியவில்லை" என்றார் குழப்பதோடு.

"தெரிந்திருந்தால் இன்று நீங்கள் நிச்சயமாக செல்வச் செழிப்பாக தானே இருந்திருக்க வேண்டும், அப்படி யென்றாலும் அதற்காக இப்படி ஒரு போராட்டமான வாழ்க்கையை வாழ்ந்திருக்க மாட்டீர்கள் தானே !" என்றேன்.

“ஆமாம்” என்றார்

“பரவாயில்லை! தெரியவில்லை என்பதை இப்பொழுது ஒப்புக்கொள்கிறீர்களா? “ என்றேன்

“ஒப்புக்கொள்கிறேன், எதை பற்றியும் சிந்திக்காமல் கண்ணை மூடிக்கொண்டு பணத்தை தேடிக்கொண்டு இருந்திருக்கிறேன். அதனால் தான் என்னவோ இன்று வரை அது என்னிடம் வரவில்லை” என்றார் சோகமாக.

“பணம் இருந்தால் நன்றாக வாழ முடியும் என்று கூறியே, நாம் வளர்க்கப்பட்டிருக்கிறோம். அந்த பணத்தை சம்பாதிக்க கடுமையாக உழைக்க வேண்டும் என்று மட்டுமே

அறிவுறுத்தப்பட்டு வந்திருக்கிறோம். இது சரிதானா என்று நீங்கள் சிந்தித்ததுண்டா?" என்று கேட்டதற்கு...

“இல்லை, ஆனால் அது தானே உண்மை” என்றார்.

“நீங்கள் சிந்தித்து அல்லது அனுபவத்தில் பார்க்காத ஒன்றை எப்படி உண்மை என்று ஏற்றுக்கொண்டீர்கள்” என்றேன்

சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு “இதை கூறியது என் பெற்றோர்களும் உறவுகளும் அல்லவா! அதை எப் படி என்னால் நம்பாமல் இருக்க முடியும்” என்றார்

“அப்படியென்றால், அவர்கள் கூறியது எல்லாவற்றை யும் நீங்கள் இன்றும் நம்புகிறீர்களா? உங்கள் மனதை தொட்டு சொல்லுங்கள் “ என்றேன்.

மௌனமானார்...

"சரி, அதை விடுங்கள். பணம் என்பது மனிதன் தன் தேவைக்காக உருவாக்கிய ஒன்று என்றபோது அது எப் படி நம்முடைய அந்தஸ்தாக மாறியது. அதற்கு என்ன காரணமாக இருக்க முடியும் என்று சொல்லுங்கள்!" என் றேன்.

"அவரால் அவர் பணத்திற்கு ஏற்ப செயல்கள் செய்ய முடியும் என்பதால், மற்றவர்களை விட அவர் உயர்ந்தவ ராக தெரிகிறார்" என்றார் குரு.

"சரியாக சொன்னீர்கள், அப்படியென்றால் அங்கே அவர்க்கு மதிப்பு அவருடைய பணமா அல்லது அவரின் செயல்களா?" என்றேன்.

"செயல்கள் தான். ஆனால் பணம் இல்லாமல் எப்படி செயல்கள் செய்ய முடியும்?" என்றார்.

"உண்மைதான். இதை விளக்கமாக சொல்ல வேண் டும் என்றால், உதாரணத்திற்கு உங்களையே எடுத்து கொள்வோம். முதன் முதலில் நீங்கள் சம்பாதித்த பணம் உங்கள் நினைவில் இருக்கிறதா?" என்று கேட்டதற்கு...

"இருக்கிறது, ரூ20. என் முதல் சம்பளம்" என்றார் புன்ன கையோடு.

"சந்தோசம். அந்த பணம் உங்களுக்கு எதற்க்காக தரப் பட்டது?"

"ஒருவரிடம் உதவியாளராக இருந்ததற்கு, அதாவது அவர் வேலை செய்யும் போது தேவைப்படும் உபக ரணங்களை எடுத்து கொடுக்கும் வேலை பார்த்தேன் அதற்க்காக அவர் எனக்கு கொடுத்தது" என்றார்.

"நீங்கள் ஒரு செயலை செய்தீர்கள், அதாவது உங்க ளால் முடிந்த செயலை செய்தீர்கள் அதற்க்காக அவர் பணம் கொடுத்தார். சரிதானே!" என்றார்.

"ஆமாம், இலவசமாக யார் தருவார்கள்?" என்றார் சிரித் துக்கொண்டே...

"சரிதான், உங்கள் தகுதியை வளர்த்துக்கொண்டு உங்கள் செயல்களுக்கான மதிப்பு அதிகரித்த பொழுது உங்கள் வருமானம் அதிகரித்தது, சரிதானே?"

"ஆமாம்" என்றார்.

"உங்கள் தகுதியும், அதற்குரிய செயல்களும் அதிகரித்த போது உங்கள் பணம் அதிகரித்தது, உண்மைதானே? "

தலையசைத்தார். நான் தொடர்ந்தேன்...

"அப்படியென்றால், உங்களுக்கு அதிக பணம் தேவை என்றால் நீங்கள் உங்கள் தகுதியையும் செயல்களையும் தானே அதிகரித்திருக்க வேண்டும். ஏன் செய்யவில்லை?" என்றதற்கு அவரிடம் பதில் இல்லை...

"என்ன செயல் செய்து கொண்டிருக்கிறோமோ, அதையே தொடர்ந்து செய்து கொண்டு பணம் மட்டும் அதிகமாக வர வேண்டும் என்று எண்ணுவது சரியா? " என்றேன்.

"தவறு தான், பணத்தை பற்றி சிந்தித்தேனே தவிர அதற்கு என்ன செய்ய வேண்டும் என்ற தெளிவை நான் சிந்திக்கவே இல்லை. இந்த சிறிய விஷயம் புரிவதற்கு இவ்வளவு காலம் ஆகிவிட்டது" என்றார் சோகத்தோடு...

"இதற்க்காக நீங்கள் கவலை கொள்ள வேண்டிய அவசியமில்லை. முடிந்தது முடிந்ததாக இருக்கட்டும் இனி

நடக்க வேண்டியதை சரியாக செய்வோம். இதில் இன் னொரு விஷயமும் நீங்கள் கவனிக்க வேண்டும்" என் றேன்.

"சொல்லுங்கள்"

"சென்ற வாரம் உங்களுக்கு கிடைத்த வேலை இதற்கு ஒரு நல்ல உதாரணம்" என்றேன்.

"எப்படி"

"பெரிய வேலைகள் கிடைத்தால் எப்படி இருக்கும் என்ற சிந்தனையின் பரிசு தானே அந்த வேலை?" என் றேன்.

"ஆமாம்"

"பெரிய வேலைக்கு பெரிய வருமானம் கிடைக்கப்போ கிறது. சரிதானே! " என்றேன்.

"ஆமாம், இதில் என்ன ஆச்சர்யம்" என்றார்

"இல்லைதான், பணத்தை அதிகப்படுத்த நீங்கள் செய்ய வேண்டிய சரியான விஷயத்தை நீங்கள் செய்து, அதா வது அந்த பெரிய வேலையை ஒப்புக்கொண்ட தன் மூலம் அதிக பணத்தையும் அடைந்திருக்கிறீர்கள். செயலை அதிகப்படுத்த தயார் ஆனவுடன் அதற்கான வெகுமதியை பெற்றுள்ளீர்கள். சரியா?" என்றேன்.

"ஆம். உண்மைதான்" என்றார் ஆச்சர்யம் கலந்த சந் தோசத்துடன்...

"இப்போது சொல்லுங்கள், பணம் என்றால்?"

"நான் செய்யும் செயல்களின் பொருள் வடிவம் தான் பணம் என்று நினைக்கிறேன்" என்றார்.

"சரியாக சொன்னீர்கள், நம் தகுதிக்குரிய செயல்களின் பொருள் வடிவம் தான் பணம்.

இப்போது சொல்லுங்கள், பணத்தை அதிகப்படுத்த நாம் என்ன செய்ய வேண்டும்?"

"என் தகுதியையும், செயல்களையும் அதிகரிக்க வேண் டும்." என்றார்.

"அற்புதம், இனி உங்கள் செயல்கள் எப்படி இருக்கும், எதை நோக்கி பயணிக்க போகிறீர்கள்?" என்று கேட்ட தற்கு...

"நான் இப்போது என்ன தகுதியில் இருக்கிறேன் என் பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது." என்றார்.

"அருமை, நீங்கள் செய்ய வேண்டிய முதல் விஷயம் அது தான். முதலில் உங்களுக்குள் இருக்கும் நம்பிக்கை மற் றும் அவநம்பிக்கைகள் சார்ந்த விஷயங்களை அறிந்து கொள்ளுங்கள். அவை சரிதானா என்பதையும் சிந் தித்து பாருங்கள்"

"புரிகிறது, ஆனால் இதை எளிமையாக செய்ய ஏதே னும் வழி உண்டா?" என்று கேட்டார்.

"இருக்கிறது, நீங்கள் இனி செய்ய போகும் ஒவ்வொரு செயலின் துவக்கத்திலும் எப்படிபட்ட சிந்தனையுடன் துவங்குகிறீர்கள் என்பதை பார்க்க வேண்டும்.

ஏன் அப்படி சிந்திக்கிறோம் என்பதையும் கவனிக்க வேண்டும். முதலில் உங்கள் வேலையை பற்றிய விஷ யங்களை மட்டும் கையில் எடுங்கள்.

ஏனென்றால், ஒரே நேரத்தில் எல்லாவற்றையும் பார்ப் பது குழப்பத்தை ஏற்படுத்த கூடும். ஒரு விஷயத் தில் கவனம் செலுத்துவதால் மனமும் சமநிலையோடு அதை கவனிக்க தொடங்கும், புரிதல்களுக்கு உட்படும், மாற்றத்தை அடையும்.

இதற்கு என்று தனியாக நேரத்தை ஒதுக்குங்கள். இரவு நேரம் அருமையான நேரம் இதை செய்வதற்கு, இது தான் நாம் அடுத்து செய்ய வேண்டிய பயிற்சி என்று கூட எடுத்துக்கொள்ளலாம்"

"நான் இதை எப்படி செய்ய வேண்டும் என்பதை புரிந் துகொண்டதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன். அது சரியா என்று பாருங்கள்" என்றார்.

"சொல்லுங்கள்" என்றேன்.

"இப்போது எனக்குள் ஒரு விஷயத்தில் ஒரு மாற்றத்தை உணர்ந்தேன். அதாவது என் மனைவி வீட்டிற்கு ஏதா வது பொருள் வாங்க வேண்டும் என்று சொன்னால் முத லில் நான் என்ன சொல்வேன் என்றால், 'பார்ப்போம்,

சீக்கிரம் வாங்கிவிடுவோம்' என்பேன். ஆனால் இப்பொழுது என்ன சொல்கிறேன் என்றால் 'ஒரு மாதத்தில் வாங்கி தருகிறேன்' என்று கூறுகிறேன்.

இந்த வேறுபாட்டையும் என் மனைவி தான் என்னிடம் சொன்னாள். அப்பொழுது தான் நானே இதை கவனித்தேன்.

முதலில் அந்த வார்த்தையை சொல்லும் போது, எப்படி வாங்கி கொடுப்பது, இருப்பதை வைத்து கொள்ளட்டும் என்று தான் தோன்றும். ஆனால் அதை சொன்னால் அவள் வருத்தப்படுவாள் என்பதற்க்காக எதையாவது சொல்லி அதை தள்ளி போடுவேன். வேதனையாக இருக்கும்.

ஆனால் இப்பொழுது ஒரு நம்பிக்கை பிறந்திருக்கிறது. என்னால் வாங்க முடியும் என்ற எண்ணம் பிறந்திருக்கிறது. அதனால் சந்தோசமாக சீக்கிரம் வாங்கி தருகிறேன் என்று கூறுகிறேன். அதை கேட்டு அவளும் என் மீது புது நம்பிக்கை கொண்டது போல தோன்றுகிறது.

இதுவரை என்னால் எதையாவது செய்ய முடியுமா என்ற கேள்வி வரும்போதெல்லாம் என்னால் முடியாது என்ற கண்ணோட்டத்திலேயே அதற்கு பதில் சொல்லியிருக்கிறேன் என்பது இப்போது புரிந்தது.

இதுபோல நான் செய்யும் ஒவ்வொரு செயலையும் எப்படி பார்க்கிறேன் என்பதை கவனிக்க வேண்டும் பிறகு இரவு நேரம் ஒதுக்கி அதை ஏன் அப்படி பார்த்தேன்

என்று சிந்தித்து பார்க்க வேண்டும். சரியா?!" என்று கேட்டார்.

"மிக சரியாக புரிந்து கொண்டீர்கள். உங்கள் வேலையை பற்றிய விஷயங்களை மட்டும் தனித்துவமாக கவனியுங்கள். அடுத்து 20 நாட்களுக்கு இதை தொடர்ந்து செய்யுங்கள். அதன் பிறகு நாம் மீண்டும் சந்திப்போம்." என்று முடித்தேன்.

அவரும் "நிச்சயமாக, தொடர்ந்து செய்கிறேன். நன்றி " என்று கூறி அங்கிருந்து சென்றார்.

அவர் செல்வதை பார்த்து கொண்டிருந்த எனக்கு ஒரே ஒரு எண்ணம் தான் மனதில் ஓடியது, என்னவென்றால், 'இந்த 20 நாட்கள் அவர் நான் சொன்னதை செய்வாரேயானால் வாழ்க்கையில் மிக பெரிய விஷயங்களை அவருக்கு இயற்க்கை காட்டும். அது அவருடைய அடிப்படையையே மாற்ற போகிறது'

நாம் யார் என்பதை முழுமையாக அறிந்து கொள்வதில் இருந்து தான் வாழ்க்கை தொடங்குகிறது

நானும் அந்த தேநீர் விடுதியிலிருந்து புறப்பட்டேன். அற்புதமான புரிதல்களும் அது தந்த மாற்றங்களோடும், அதை சார்ந்த கேள்விகளோடும் அடுத்த சந்திப்பு நிகழவிருக்கிறது.

நீங்கள் எங்கும் சென்று விடாதீர்கள்...[16]

அத்தியாயம் 4

# நாம் என்ன கொடுக்கிறோம்?

**நமக்கு என்ன நிகழ்கிறது என்பதை விட நாம் அதற்க்கு என்ன எதிர்வினை கொடுக்கிறோம் என்பதே அடிப்படை.**

நாம் நம் வாழ்க்கையில் ஒவ்வொரு சூழ்நிலைக்கும் அதன் எதிர்வினையாய் என்ன கொடுத்து கொண்டிருக்கிறோம் என்பது நம் வாழ்க்கையை தீர்மானிக்க கூடிய ஒன்றாக இருக்கிறது. இதனால் தான் இதை பற்றிய தெளிவு அவசியமாகிறது.

இப்பொழுது உள்ள எந்த கல்வி முறையும் இதை போதிப்பதில்லை, பெரும்பாலான பெற்றோர்களுக்கும் இது பற்றிய விழிப்புணர்வு இருப்பதில்லை.

இதை பற்றிய அனுபவம் உங்களுக்கு ஏற்பட்டிருக்கலாம் அல்லது இது மிகவும் நுணுக்கமான மனதின் செயல்பாடு என்பதால் நீங்கள் அதை கவனிக்கவும் தவறியிருக்கலாம்.
இது அவ்வளவு முக்கியமான விஷயமா என்று கூட உங்களுக்கு தோன்றக்கூடும். ஆனால் இதுதான் உங்கள் வாழ்க்கையை தீர்மானிக்கும் அடிப்படை.

குருவுடனான இந்த சந்திப்பு உங்களுக்கு இதன் ஆழம் என்ன என்பதையும், இதனால் நமக்குள் ஏற்படும் மாற்றங்கள் என்ன என்பதையும் உங்களுக்கு எடுத்துரைக்கும்.

கடந்த முறை நான் குருவை சந்தித்தபோது அவரிடம் 20 நாட்களுக்கு பிறகு சந்திப்போம் என்று தான் கூறியிருந்தேன் ஆனால் அவர் ஒரு வாரத்திலேயே மீண்டும் என்னை தொலைபேசியில் அழைத்து நாம் சந்திக்க முடியுமா என்று கேட்டார். அதற்க்கு நானும் சம்மதித்து எங்கே எப்போது என்பதை கலந்து பேசி உறுதி செய்து கொண்டோம்.

மறுநாள் மாலை நேரம், அதே தேநீர் விடுதி...

நான் தேநீர் விடுதிக்குள் நுழைந்தபோது அவர் எனக்கு முன்பே வந்து அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் குழப்பமும், கவலையும் தென்பட்டது. வழக்கமான நலம் விசாரிப்பு கூட மிக சோகமாகவே இருந்தது. என்ன நடந்தது என்று அவர் சொன்னால் தான் நமக்கு தெரியும் ஆனால் அவர் பேசுவதாக தெரியவில்லை அதனால் நான் இரண்டு கோப்பை தேனீரை வாங்கி அவரிடம் ஒன்றை கொடுத்து

"இதை முதலில் பருகுங்கள்" என்றேன். வாங்கிக் கொண்டார் மௌனமாக...

நானும் தேநீரை பருகியபடியே என் பேச்சை தொடங்கினேன்.

"எதனால் இந்த எதிர்பாரா சந்திப்பு, என்ன நடந்தது என்று சொல்லுங்கள். மிகவும் கவலையாக தென்படுகிறீர்கள்" என்று நான் கேட்டதற்கு மிகுந்த குழப்பத்தோடு...

“நான் என்ன சொல்வது என்றே தெரியவில்லை! நிறைய கேள்விகள், குழப்பங்கள், குற்ற உணர்வுகள் என்று என் மனம் என்னை பாடாய் படுத்திக்கொண்டிருக்கிறது. எதை முதலில் உங்களிடம் கேட்பது, சொல்வது என்று கூட புரியவில்லை” என்றார்.

“அப்படி என்ன நடந்தது, முதலில் உங்கள் குழப்பம் தொடங்க காரணமாக இருந்த நிகழ்வை கூறுங்கள்” என்றேன்.

“உங்களை சந்தித்த மறுநாள் நான் வழக்கம்போல் வேலைக்கு சென்றேன். வேலைக்கு தேவையான சில பொருட்களை வாங்க வேண்டியிருந்ததால் போகும் வழியில் அவற்றை வாங்கி சென்றுவிடலாம் என்று நான் வாங்கும் வாடிக்கையான கடைக்கு சென்றேன்.

அது பெரிய கடை என்பதால் நிறைய வேலையாட்கள் இருப்பார்கள். வியாபாரம் எப்போதும் பரபரப்பாய் நடந்துகொண்டே இருக்கும்.

எனக்கு தேவையான பொருட்களை ஒரு வேலையாளிடம் சொல்லிவிட்டு அவர் அவற்றை எல்லாம் எடுத்து வந்து தரும் வரை நான் காத்துக்கொண்டிருந்தேன். அப்போது ஒருவர்...

தான் வாங்கிய பொருட்கள் அனைத்திற்கும் கொடுக்க வேண்டிய பணத்திற்கான ரசீதை வாங்கி பார்த்துக் கொண்டிருந்தார். அதுவரை நானும் அவரை சாதாரணமாக தான் பார்த்துக்கொண்டிருந்தேன் அப்போது அவர் தன கைப்பையில் இருந்த காசோலை ஒன்றை எடுத்து அதில் அந்த ரசீதுக்கான பணத்தை எழுதி கடைக்காரரிடம் கொடுத்தார்” என்றார்.

“இதில் என்ன இருக்கிறது!” என்றேன்

“அந்த காசோலையில் எழுதப்பட்ட தொகை எவ்வளவு தெரியுமா? “ என்றார்.

“எவ்வளவு”

“ரூ 13,15,000 “ என்றார்.

“அதனால் என்ன ஆயிற்று” என்றேன்.

“அந்த தொகையை பார்த்தவுடன் என் மனம் ஏதோ ஆனது. ஏனென்றால், நான் இதுவரை இப்படி ஒரு தொகைக்கு இந்த பொருட்கள் வாங்கப்பட்டதை நான் பார்த்ததேயில்லை. என் தொழில் சார்ந்த பொருட்கள் என்றாலும் இவ்வளவு அதிகமாக நான் பார்த்ததில்லை.

இந்த அளவுக்கு பொருட்கள் என்றால் எவ்வளவு பெரிய வேலையாக இருக்கும் என்று சிந்தித்துக்கொண்டிருந்த அடுத்த நொடி, எனக்கு இப்படி ஒரு வேலை கிடைப் பது கடினம். அப்படியே கிடைத்தாலும் அதை என்னால் செய்ய முடியுமா என்ற கேள்விகள் அடுத்தடுத்து எழுந் தன.

சிந்தனையில் மூழ்கியிருந்த என்னை அந்த கடை யின் வேலையாள் உலுக்கி எழுப்பினர். நீங்கள் கேட்ட பொருட்கள் இருக்கிறது எடுத்துக்கொள்ளுங் கள் என்று கூறிவிட்டு அதற்க்கு செலுத்தவேண்டிய தொகைக்கான ரசீதை என்னிடம் கொடுத்தார்.

அதில் தொகை எவ்வளவு தெரியுமா?” என்றார்

“எவ்வளவு?” என்றேன்
“ரூ 3500” என்று சொல்லிவிட்டு ஏளனமாக சிரித்தார்.

“எதற்க்கு இப்பொழுது சிரிக்கிறீர்கள்” என்றேன்

“அந்த தொகை எங்கே, இந்த தொகை எங்கே என்று நினைத்தேன் சிரிப்பு வந்தது.” என்றார்.

“உயர்வும் தாழ்வும் நம் மனதில் இருக்கிறது. அதனால் தான் அது செயலிலும் வெளிப்படுகிறது.” என்றேன்.

“இங்கு தான் எனக்கு குழப்பமே ஏற்பட்டது, பொருட்களை வாங்கிவிட்டு நான் வேலை செய்யும் இடத்திற்கு வந்து சேர்ந்துவிட்டாலும் என் மனம் அதையே நினைத்து கொண்டிருந்தது. நான் மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கிறேன் என்று கவலையாகவும் இருந்தது

மனதை பற்றி தெரியாமல் இருந்திருந்தால், இதையே நாள் முழுக்க சிந்தித்து விட்டு ‘எனக்கு விதித்தது இது தான்’ என்று எனக்கு நானே சமாதானம் கூறிக்கொண்டு என் வேலையை பார்த்திருப்பேன். ஆனால் இம்முறை அவ்வாறு தோன்றவில்லை மாறாக ‘நான் இப்படி சிந்திப்பது சரியா?’ என்று தான் தோன்றியது” என்றார்.

“சரியாக தானே சிந்தித்துள்ளீர்கள், இதில் என்ன குழப்பம்” என்றேன்.

“இந்த சிந்தனை வந்த பிறகு தான் ஏராளமான கேள்விகளும் என் மனதிற்குள் வரிசையாய் படையெடுத்தது. நிறைய கேள்விகளுக்கு விடை தெரியாததால் குழப்பம் தொடங்கியது. சில பதில்கள் நம்பிக்கையாகவும், சில பதில்கள் என்னையே கேள்வி கேட்பதாகவும் இருந்ததால் விடை காண முடியாமல் தடுமாறி கொண்டிருக்கிறேன்.

நான்கு நாட்களாகியும் திருப்தி அடையும் பதில் எனக்கு கிடைக்காததால் நான் உங்களிடம் அவற்றை கேட்டு

தெளிவு படுத்திக்கொள்ளலாம் என்று உங்கள் முன் இப்பொழுது அமர்ந்திருக்கிறேன்” என்று முடித்தார்.

## குழப்பங்கள் தான் தெளிவிற்கான ஆரம்பம்[17]

“இந்த முயற்சிக்கு முதலில் என்னுடைய வாழ்த்துக்கள். ஏனென்றால், நாம் ஒரு சூழ்நிலையை அனுபவிக்கும் போது அதற்க்கு என்ன பதில் வினையை கொடுத்துக் கொண்டிருக்கிறோம் என்ற கவனம் வந்துவிட்டால் நாம் படிப்படியாக நம் வாழ்க்கையை தீர்மானிக்கும் சுதந்தி ரத்தை அடையலாம். அதற்கான முதல் அடியை நீங்கள் எடுத்து வைத்து விட்டீர்கள்.

இதன் ஆரம்பத்தில் நம்முடைய குறைகளைத்தான் அதிகமாக பார்ப்போம் என்பதால் நமக்குள் குற்ற உணர்ச்சி பெருக்கெடுத்து நம்மை கொள்ளும். அதே வேளையில் நம்முடைய நிறைகளை நாம் பார்க்கும் போது மனம் திருப்தி அடையும், ஆனந்தம் பெருக்கெ டுக்கும்.

இது உங்களை நீங்கள் அறியும் முயற்சி என்பதால் முத லில் குழப்பம் ஏற்பட்டு பிறகு படிப்படியாக தான் தெளிவு நிலையை அடைவோம். அப்படி நாம் ஒரு முறை தெளி வடைந்துவிட்டால் மறுபடியும் நம் மனம் குழப்பத்திற்குள் சிக்கிக்கொள்ளாது. உண்மையான சுதந்திர வாழ்க் கையை நாம் அனுபவிப்போம்.

எதற்காக இதை சொல்கிறேன் என்றால் இதை நீங்கள் நினைத்து கவலைகொள்ள வேண்டாம். இதையெல் லாம் தாண்டி தான் சுதந்திரமான வாழ்க்கையை அனுப விக்க முடியும்.[18]

சரி! இப்பொழுது, உங்கள் சந்தேகங்களை, கேள்வி களை நீங்கள் ஒவ்வொன்றாக கேளுங்கள் எனக்கு தெரிந்ததை நான் உங்களோடு பகிர்ந்து கொள்கிறேன்.

அதற்கு முன் உங்களை கொஞ்சம் ஆசுவாசப்படுத்தி கொள்ளுங்கள். அப்போதுதான் இதை நாம் தெளிவாக விவாதிக்க முடியும்." என்றேன்.

இதை படித்துக்கொண்டிருக்கும் நீங்களும் கொஞ் சம் ஆசுவாசப்படுத்தி கொள்ளுங்கள். உங்கள் மூச்சை நன்கு உள் இழுத்து வெளி விடுங்கள். உங்கள் உடல் தளர்வடைந்து விட்டது என்று நீங்கள் உணரும் வரை இதை செய்யுங்கள். உங்கள் உடலில் நீங்கள் தளர்வை உணரும் போது உங்களின் மனமும் அமைதியடைந்தி ருக்கும். மனம் அமைதியாக இருந்தால் எந்த ஒரு விஷ யத்தையும் நாம் முழுமையாக கிரகிக்க முடியும்.[19]

"இப்பொழுது உங்கள் முதல் கேள்வி என்ன? கேளுங் கள்" என்றேன் குருவிடம்...

"அவரால் மட்டும் எப்படி அவ்வளவு பெரிய வேலை களை எடுத்து செய்ய முடிகிறது? என்னால் ஏன் முடிய வில்லை? " என்று கேட்டார்.

"உங்களால் முடியாது என்று முடிவு செய்து விட்டீர்களா? "

"இல்லை, இருந்தாலும் இன்னும் நான் அப்படி ஒரு வேலையை செய்யவில்லையே! எனக்கு கிடைக்கவும் இல்லையே?!" என்றார்.

"அப்படியென்றால் அவர் சிறந்தவர். அதனால் தான் அவருக்கு அவ்வளவு பெரிய வேலைகள் கிடைக்கிறது.

நீங்கள் தாழ்ந்தவர் என்பதால் உங்களுக்கு கிடைக்க வில்லை. அப்படித்தானே! "

"ஆம்" என்றார்..

"சரி, நீங்கள் பார்த்த அந்த நபரை தானே நீங்கள் சிறந் தவர் என்று கூறுகிறீர்கள். ஒருவேளை அவர் பொருட் களை மட்டும் வாங்கி தரும் ஒரு வேலைக்காரராக இருந்து, உண்மையில் வேறொருவர் அந்த வேலைக்கு சொந்தக்காரர் என்றால்?"

"அதை எப்படி உங்களால் உறுதியாக சொல்ல முடியும்" என்றார்.

"நான் உறுதியாக சொல்லவில்லை, ஆனால் அப்படி இருக்கவும் வாய்ப்பு உள்ளது தானே? "

"இருக்கிறது, ஏனென்றால் எனக்கு அவரை பற்றி எது வும் தெரியாது" என்றார்.

"இன்னொரு வாய்ப்பும் இருக்கிறது. ஒரு வேலை அவர் நகரத்தை விட்டு தொலைவில் இதே போன்ற ஒரு கடை நடத்தி வந்து அதற்காக பொருட்களை வாங்கியும் சென்றிருக்கலாம் இல்லையா?"

"இருக்கலாம்" என்றார்.

"அப்படி இருக்கும்போது, நீங்கள் பார்த்த அந்த சூழ்நி லையை சுற்றி என்ன நடக்கிறது என்று நமக்கு எதுவும் தெரியாது எனும் போது நீங்கள் கூறிய அனைத்தும் உங் கள் கற்பனையின் விளைவுகள் தானே"

"ஆம், இருக்கலாம்" என்றார்.

"அப்படியென்றால், நீங்கள் ஏன் இந்த சூழலை இந்த கண்ணோட்டத்தில் பார்த்தீர்கள்?" என்று கேட்டதற்கு...

“எனக்கு தெரியவில்லை” என்றார்.

“சரி, நான் சொல்கிறேன். நீங்கள் அவரிடத்தில் உங் களை தான் பார்த்தீர்கள். அவரிடத்தில் நீங்கள் இருந்து உங்கள் சூழ்நிலையை பார்த்ததால் வந்த கண்ணோட் டம் இது. நீங்கள் செய்யும் வேலையை தான் அவரும் செய்வதாக நினைத்தீர்கள். அதற்காக தான் அவர் அவ் வளவு பொருட்களையும் வாங்குவதாக நினைத்தீர்கள். இல்லையா?”

“ஆம் “ என்றார்.

“நம் எண்ணங்கள் ஒரு கண்ணோட்டத்தில் பயணிக்க துவங்கி விட்டால் அது தொடர்ந்து அதே திசையில் தான் பயணித்து கொண்டிருக்கும். உங்களுக்கு அந்த கண்ணோட்டத்தின் பாதையை பற்றிய விழிப்பு ஏற்படும் வரை அதில் மாற்றம் நிகழாது.

ஆனால் இன்று நீங்கள் முதன் முறையாக அதன் கண் ணோட்டத்தை கேள்வி கேட்டிருக்கிறீர்கள் அதனால் வந்த குழப்பம் தான் இது.”

“புரிகிறது. நீங்கள் சொல்வது சரி. அவர் இடத்தில் நான் இல்லையே என்ற ஏக்கம் தான் என்னை கவலைக்குள் ளாக்கியது என்பது இப்பொழுது எனக்கு புரிகிறது.

ஆனால் எனக்கு ஒன்று புரியவில்லை, அவருடைய இடத்தில் நான் இல்லையே என்று ஏன் பார்க்கிறேன். எதனால் என்னை நான் அவரோடு ஒப்பிட்டு பார்க்கி றேன்?” என்று கேட்டார்.

“காரணம் இருக்கிறது, உங்களுடைய தற்போதைய வாழும் சூழ்நிலை உங்களுக்கு திருப்திகரமாக உள் ளதா?” என்று கேட்டதற்கு...

“இல்லை, அதனால் தானே இவ்வளவும் முயற்சிக்கி றோம்” என்றார்.

“சரி தான். இந்த மனநிலை தான் நீங்கள் அவருடைய இடத்தில் இல்லையே என்று ஏக்கப்பட்டதற்கு கார ணம்.”

“எனக்கு புரியவில்லை” என்றார்.

“தெளிவாக சொல்கிறேன், உங்களுடைய தற்போதைய சூழல் உங்களுக்கு திருப்திகரமாக இல்லை என்பதால் தான் மனம் ஒரு நல்ல சூழ்நிலையை தேடுகிறது. அந்த தேடலினால்  நாம் சந்திக்கும் ஒவ்வொரு மனிதரிடமும் நம்மிடம் இல்லாத ஒன்றை பார்க்கும் பொழுது ஒரு ஏக் கம் நமக்குள் வருகிறது.

சில நேரங்களில் இந்த ஏக்கம் மிக சிறிய அளவில் இருப் பதால் நம் கவனத்தில் அது வருவதில்லை. உண்மை என்னவென்றால் நாம் ஒரு நாளைக்கு குறைந்தது 100 முறையாவது ஏக்கம் கொள்கிறோம் என்பது.

நம்மிடம் இல்லாத ஒன்று ஒருவரிடம் இருப்பதை நாம் பார்க்கும் பொழுது நமக்கு என்ன தோன்றுகிறது ‘அவர் மிகவும் கொடுத்து வைத்தவர்’ என்று...

ஆனால் அது உண்மையா?

அவரிடம் இல்லாத ஒன்று நம்மிடம் இருக்கலாம் அதற் காக அவர் நம்மை பார்த்து ஏக்கப்பட்டிருக்கலாம். ஏனென்றால், இங்கு எல்லாருக்கும் எல்லாமும் கிடைப் பதில்லை. எல்லாருக்குள்ளும் ஏதோ ஒன்று தன்னிடம் இல்லையே என்ற கவலை இருந்து கொண்டு தான் இருக்கிறது.

இன்னும் தெளிவாக சொல்ல வேண்டுமென்றால், மற்ற வருடைய வாழ்க்கையை நாம் ஆழமாக சென்று பார்த் தோமானால், நம் வாழ்க்கை பரவாயில்லை நமக்கு இதுவே போதும் என்று தோன்றிவிடும். இல்லையா?"

"ஆம், சில முறை இதை நான் உணர்ந்திருக்கிறேன்" என்றார்.

"நிச்சயமாக எல்லாருக்கும் ஒரு சில முறையேனும் இது புரிந்திருக்கும். ஆனாலும், அந்த கண்ணோட் டம் தொடர்ந்து கொண்டே தான் இருக்கும். அதற்க்கு காரணம் என்னவென்று அவர்களுக்கு புரியவில்லை. அதோடு, இந்த கண்ணோட்டம் சரி தானா என்ற எண் ணமும் அவர்களுக்கு தோன்றுவதில்லை" என்றேன்.

"சரி தான், எனக்கும் இன்று தான் இந்த கேள்வி வந்தது, இதற்க்கு என்ன காரணம்?" என்றார்.

"நம்மிடம் இல்லாததை பற்றியே நாம் எப்போதும் சிந்தித் துக்கொண்டிருப்பதால் தான் நமக்கு இந்த கண்ணோட் டமே வருகிறது.

இந்த கண்ணோட்டம் சரி தானா? உண்மையில் நீங்கள் பற்றாக்குறையில் தான் வாழ்கிறீர்களா? உங்களுக்கு தேவையானது எதுவும் உங்களிடம் இல்லையா?" என்று கேட்டதற்கு...

"என்னிடம் சிறிதளவு இருக்கிறது, ஆனால் அது என் வாழ்நாள் முழுவதிற்கும் போதாதே நான் என் நிலையை உயர்த்தியாக வேண்டும் தானே?" என்றார்.

"நிச்சயமாக, உங்களுக்கு தேவையானதை சம்பாதிக்க நீங்கள் பயணப்பட வேண்டும் என்பதில் எந்த மாற்று கருத்தும் இல்லை. ஆனால் அதற்காக நீங்கள் இப்

பொழுது வாழ்ந்துகொண்டிருக்கும் சூழலை குறை கூற வேண்டிய அவசியம் இல்லையே!

ஏனென்றால்,...

**இன்று நீங்கள் உயிரோடு இருக்கிறீர்கள் என்றால் உங்களுக்கு தேவையான எல்லாவற்றையும் இயற்கை கொடுத்திருக்கிறது என்று தானே அர்த்தம்.**

அதிலும் நீங்கள் உங்கள் குடும்பத்தோடு இருக்கிறீர்கள் என்றால் இயற்கை உங்களை கூடுதலாக ஆசிர்வதித் திருக்கிறது என்று தானே அர்த்தம்."

"உண்மைதான், என்னிடம் நிறைய இருக்கிறது. முதலில் என்னுடைய ஆரோக்யம், என்னுடைய பெற்றவர்கள், என் மனைவி, பிள்ளைகள் என்று நிறைய என்னிடம் உள்ளது. இவர்களுக்கு தேவையானதை செய்ய போது மான பணம் மட்டும் தான் என்னிடம் இல்லை. ஆனால் அந்த பணத்தை சம்பாதிக்க கூடிய தொழிலும் அதை சிறப்பாக செய்யும் திறமையும் என்னிடம் உள்ளது. அவர் களுக்கு தேவையானதை எப்படியோ இதுவரை செய்து தான் வந்திருக்கிறேன்.

என்னிடம் என்ன இருக்கிறது என்பதை பற்றி நான் இது வரை இவ்வளவு ஆழமாக கவனித்ததில்லை.

உங்களை சந்திக்கும் முன் வரை நான் என் வாழ்க் கையை பற்றி எப்போதும் புலம்பிக்கொண்டு தான் இருந்திருக்கிறேன். முன்னேற வேண்டும் என்ற எண் ணம் தீவிரமாக இருந்தாலும் அதற்காக நான் எதுவும் செய்ததில்லை. ஆனால் எனக்கு மட்டும் ஏன் இவ்வளவு கஷ்டம் என்று எப்போதும் புலம்பிகொண்டே இருந்தி ருக்கிறேன்" என்றார்.

*குருவைப்போல் தான் நீங்களும் இருக்கிறீர்களா?*

“மகிழ்ச்சி, உங்களின் வாழ்க்கையிலும் நிறைய நன்மைகள் இருக்கிறது என்பது உங்களுக்கு புரிந்து விட்டது. மிக்க மகிழ்ச்சி.

நம்மிடம் என்ன இல்லை என்பதை நாம் எப்போதும் கவனத்தில் வைத்திருப்பது போல் நம்மிடம் என்ன இருக்கிறது என்பதையும் முழுமையாக தெரிந்து வைத்திருக்க வேண்டும். நம்மிடம் இருக்கும் அனைத்திற்குமான நன்றியுணர்வு நமக்கு இருக்க வேண்டும்.”

“நிச்சயமாக, நான் புரிந்துகொண்டேன். இனி என்னிடம் இருக்கும் அனைத்தையும் கவனித்து நன்றியையும் செலுத்துவேன்” என்றார்.

“நன்றியுணர்வை பற்றிய உங்களது புரிதலை ஆழப்படுத்த வேண்டிய விஷயங்களை பற்றி நாம் அடுத்த அடுத்த சந்திப்புகளில் விரிவாக பார்க்கலாம்

தற்போது நீங்கள் கவனத்தில் கொள்ள வேண்டியது உங்களிடம் உங்களுக்கு தேவையான விஷயங்களும், பொருட்களும் இருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்வது மட்டும் தான்.

இன்று நீங்கள் என்னை சந்தித்தது இயற்கையின் செயல் தான் என்று நான் கருதுகிறேன். ஏனென்றால், இன்னொரு முக்கியமான ஒன்றையும் இன்று விவாதிக்கலாம் என்று எண்ணுகிறேன்[20].”

“என்ன அது? என்று கேட்டார்.

“உங்களுக்கு தெரிந்ததுதான், ‘**நீங்கள் எதை கொடுக்கிறீர்களோ அதையே பெறுகிறீர்கள்**’ என்பதைத்தான் ” என்றேன்.

“ஆம், உண்மைதான் நாம் என்ன பிறருக்கு செய்கி றோமோ, அது நன்மையாயினும் தீமையாயினும் மீண் டும் நம்மை வந்தடைகிறது.” என்றார்.

“இது மட்டும் தான் இதன் பொருள் என்று நினைக்கிறீர் களா? “ என்றேன்.

“வேறென்ன இருக்க முடியும்” என்றார்.

“நீங்கள் சொன்னது சரிதான், ஆனால் இன்னும் அழமாக பார்த்தால் இதன் அர்த்தம் உங்களுக்கு முழு மையாக புரியும்”

“சொல்லுங்கள்” என்றார்.

“நீங்கள் சிந்திக்கும் ஒவ்வொரு எண்ணமும் ஒரு குறிப் பிட்ட அலைவரிசையில் வெளிப்படுகிறது, அதாவது நீங்கள் கொடுக்கிறீர்கள். அப்போது அதே அலைவரி சையில் உள்ள மற்ற எண்ணங்களை அது மீண்டும் உங் களிடமே ஈர்த்து வருகிறது.

இதை தான் ‘நாம் என்ன கொடுக்கிறோமோ அதையே பெறுகிறோம்’ என்று சொல்கிறார்கள்.” என்றதற்கு...

“கொஞ்சம் புரியவில்லை, இன்னும் கொஞ்சம் விளக்க மாக சொல்ல முடியுமா? “ என்று கேட்டார்.

“நிச்சயமாக, நீங்கள் அன்று காலையில் அவரை சந் தித்த பொது என்ன சிந்தித்தீர்கள்? “ என்றேன்

“இவர்க்கு மட்டும் எப்படி இவ்வளவு பெரிய வேலைகள் கிடைக்கின்றது என்று சிந்தித்தேன்” என்றார்.

“சரி, அப்போது உங்களின் உணர்வு நிலை எப்படி இருந் தது? “ என்று கேட்டேன்

“ஏக்கம், கவலை இவை இரண்டும் கலந்த கலவை” என்றார்.

“அப்படியென்றால், நீங்கள் அந்த நிகழ்வினால் பாதிப்ப டைந்து ஏக்கம் மற்றும் கவலையை பதிலாக கொடுத் துள்ளீர்கள். சரிதானே? ” என்றேன்.

“ஆமாம்” என்றார்.

“அப்படியென்றால், நாளைக்கு இதே ஏக்கமும், கவலை யும் மீண்டும் உங்களிடமே வந்து சேரும் ஏதோ ஒரு சூழ லின் மூலமாக” என்றேன்.

“என்ன சொல்கிறீர்கள்?” என்றார் அதிர்ச்சியாக.

“ஆம்” என்றேன்.

“எனக்கு கொஞ்சம் பயம் வருகிறது. ஏனென்றால், நான் இதுபோன்ற உணர்வுகளை தான் இதுவரை உணர்ந்தி ருக்கிறன்” என்றார் கவலையாக.

“பயம் வருவது இயல்பு தான், ஆனாலும் இது தான் உண்மை. இதை நீங்கள் புரிந்துகொள்ளும் போது தான் உங்கள் வாழ்வை தீர்மானிக்கும் சக்தியை நீங்கள் பெறு கிறீர்கள்” என்றேன்.

மௌனமாகவே இருந்தார். நான் தொடர்ந்தேன்...

“கவலை வேண்டாம், முடிந்தது முடிந்ததாகவே இருக் கட்டும். இந்த நிமிடம் உங்கள் கையில் உள்ளது. இப் பொழுது ஒரு நல்ல விஷயத்தை சிந்தித்து அதை உணர்வதன் மூலம் நாளையும் நமக்கு தேவையான சூழல் கிடைக்கும்படி நாம் செய்யலாம்.

நீங்கள் இதை ஏற்கனவே செய்திருக்கிறீர்கள். அதனால் இது உங்களுக்கு சுலபமானது தான்” என்றேன்.

“என்ன சொல்கிறீர்கள்?” என்றார்.

“நம்முடைய முதல் சந்திப்பில் நான் உங்களிடம் என்ன செய்ய சொன்னேன்? “

“எனக்கு தேவையானது எனக்கு கிடைத்தால் எப்படி இருக்கும் என்று சிந்தித்து பார்க்க சொன்னீர்கள்” என் றார்

“அதை செய்தபோது உங்கள் உணர்வு நிலை எப்படி இருந்தது? “

“மிகவும் சந்தோசமாக, ஒரு திருப்தி கிடைத்தது” என் றார்.

“அப்படியென்றால் நீங்கள் சந்தோஷத்தையும், திருப்தி யையும் கொடுத்துள்ளீர்கள்”

“ஆம், அது எனக்கு மீண்டும் கிடைக்கவும் செய்தது” என்று உற்சாகமடைந்தார்.

“புரிந்து கொண்டீர்கள், உங்களுக்கு தேவையானதை சிந்தித்து அதை உணர்ந்து அதை எப்படி அடைந்தீர் களோ, அதை போல நீங்கள் ஒரு சூழ்நிலையை சந் திக்கும் போது அதனால் பாதிப்படைந்து ஒரு தவறான உணர்வை தருவதற்கு பதிலாக நல்ல உணர்வை கொடுக்க கற்று கொண்டீர்கள் என்றால் உங்கள் வாழ்க்கை உங்கள் கையில்.” என்றேன்.

“புரிகிறது. கடையில் நான் சந்தித்த அந்த சூழலில் நான் கவலை கொண்டதற்கு பதிலாக, அவர்க்கு அந்த வேலை கிடைத்திருக்கிறது என்று சந்தோசப்பட்டிருந் தால், அதே போன்ற சந்தோசம் எனக்கு மீண்டும் கிடைத்திருக்கும். இல்லையா?“ என்றார்.

“சரியாக சொன்னீர்கள். அவ்வளவுதான் விஷயம். இதை தான் வெற்றியாளர்கள் சுருக்கமாக சொல்கிறார்கள். எப்படியென்றால்...

**‘மற்றவர் வெற்றியை உங்களுடையதை போல கொண்டாட கற்றுக்கொள்ளுங்கள்’**

நாம் வெற்றியை உணரும்போது அதையே கொடுக்கி றோம். இதனால் நம் வாழ்விலும் வெற்றி நுழைய ஆரம் பிக்கிறது” என்று முடித்தேன்.

“உண்மைதான், இனி நான் என்னுடைய ஒவ்வொரு சூழலிலும் என்ன உணர்வை கொடுத்து கொண்டிருக்கி றேன் எனபதை கவனிக்கிறேன்.” என்றார்.

“சந்தோசம், நீங்கள் ஒரு செயலை கவனிக்க தொடங் கிய உடனே என்ன கொடுத்துக்கொண்டு இருக்கிறீர் கள் என்பதும் நீங்கள் என்ன கொடுக்க வேண்டும் என் பதும் உங்களுக்கு தெளிவாக புரிந்து விடும்.”

“நிச்சயமாக இதை தொடர்ந்து முயற்சிக்கிறேன். நான் அடுத்து உங்களை எப்போது சந்திக்கலாம்?’

“நாம் ஏற்கனவே சந்திப்பதாக முடிவு செய்த அதே தேதி யில் நாம் சந்திப்போம். இதை மட்டும் நீங்கள் தொடர்ந்து முயற்சி செய்து, உங்களுக்கு என்ன நடக்கிறது என் பதை பாருங்கள்” என்றேன்.

“நிச்சயமாக செய்கிறேன். இன்னும் 10 நாட்கள் இருக்கி றது அடுத்த சந்திப்பிற்கு. அதற்குள் நான் யாராக இருக் கிறேன் என்பதை கண்டறிய முயல்கிறேன்” என்றார்.

“சந்தோசம், ஆனால் அவசரமோ, அழுத்தமோ வேண்டாம். நிதானமாக செய்யுங்கள்!” என்றவுடன், “சரி” என்று ஆமோதித்து விட்டு அவர் விடைபெற்று கொண்டார்.

அவருடைய புரிந்துகொள்ளும் திறன் உண்மையில் என்னை வியக்க வைக்கிறது. அவர் நிச்சயமாக ஒரு அற்புதமான வாழ்க்கையை வாழ போகிறார் என்று தோன்றுகிறது.

*நீங்களும் தான்…*

எண்ணங்களால், உணர்வுகளால், செயல்களால் நாம் என்ன கொடுத்து கொண்டிருக்கிறோமோ அதைத் தான் மீண்டும் பெற்றுக்கொண்டு இருக்கிறோம். இதை கொண்டு தான் நீங்கள் யாரென்பதும் தீர்மானிக்கபடுகிறது. உங்கள் வாழ்க்கையும் தீர்மானிக்கபடுகிறது.

இதை நீங்கள் உங்கள் அனுபவத்தில் உணரும்போது நீங்கள் உங்கள் வாழ்க்கையை உருவாக்க தொடங்கலாம். அதற்க்கு நீங்கள் குருவை போல முயற்சியை கையில் எடுங்கள். வெற்றி உங்களுடையது.

அடுத்த சந்திப்பில் என்ன நடக்க காத்திருக்கிறது, எதை பற்றியெல்லாம் பேச போகிறோம் என்ற ஆவலோடு, அங்கிருந்து புறப்பட்டேன்.

“எல்லாம் நன்மைக்கே!” என்பது ஒவ்வொரு முறையும் நிரூபிக்கப்படுகிறது. இல்லையா?[21]

அத்தியாயம் 5

# உங்களை பற்றி...

என்னுடைய வாழ்க்கையில் என்ன கொடுத்துக் கொண்டிருக்கிறேன் என்பதை நான் கவனித்த போது நான் யாராக இருக்கிறேன் என்பதையும் கண்டுகொண் டேன். அந்த நாளை என் வாழ்வில் என்றுமே மறக்க முடியாது.

நான் யாராக இருக்கிறேன் என்று அதுவரை நினைத்து கொண்டிருந்தேனோ அவை எல்லாம் வெறும் கற் பனை பிம்பங்கள் என்பதை உணர்ந்தேன். நொறுங்கி போனேன்.

தற்பொழுது இதே முயற்சியில் தான் குருவும் இருக்கி றார். அவருடைய பிம்பங்களை அவர் கண்டுகொண் டாரா இல்லையா என்ற கேள்விகள் என் மனதில் அவ் வப்போது வந்து சென்றது. ஆனாலும் அவரை சந்திக் கும் நாள் வரை காத்திருந்தேன்.

எனக்கு ஏன் இந்த ஆவல்! எதற்காக?

காரணம் இருக்கிறது. இந்த சந்திப்பின் முடிவில் நீங்க ளும் அறிந்து கொள்வீர்கள்!!

நாங்கள் சந்திப்பதாக உறுதி செய்த நாள் அன்று காலை நானே அவரை தொலைபேசியில் தொடர்புகொண்டு சந்திப்பின் நேரம் மற்றும் இடத்தை உறுதி செய்து

கொண்டேன். இந்த சந்திப்பில் நிறைய உணர்ச்சிகர மான நிகழ்வுகள் இருக்கலாம் என்பதால் நான் என் வீட் டிலேயே சந்திப்பை நிகழ்த்த கேட்டுகொண்டேன். அவ ரும் சம்மதித்தார்.

மாலை நேரம்... என் வீட்டின் மாடியில்...

குரு மிகவும் கலக்கமாக தென்பட்டார். நான் எதிர்பார்த் ததுதான் என்றாலும்,

“என்ன ஆயிற்று?” என்று கேட்டேன்.

“என்ன சொல்வதென்றே தெரியவில்லை, நான் நானாக இல்லை என்று நினைக்கிறன்” என்றார்.

ஏன் அப்படி சொல்கிறார் என்பது தெரிந்திருந்தாலும் நான் அவரிடம்...

“நீங்கள் சொல்வது எனக்கு புரியவில்லை!” என்றேன்.

“என்னை நான் மிகவும் நல்லவன் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்” என்றார்.

“உண்மைதானே” என்றேன்.

“நீங்கள் வேறு, என்னை சங்கடப்படுத்தாதீர்கள். நான் உண்மையில் எப்படிப்பட்டவனாக இருக்கிறேன் என் பதை கண்டேன். அதுவும் சிறிதளவே கண்டேன், அதற்கே நொறுங்கி போயிருக்கிறேன்” என்றார் சோக மாக.

“என்ன நடந்தது என்று நீங்கள் விளக்கமாக கூறினால் தான் என்னால் அதை புரிந்துகொள்ள முடியும்” என் றேன் மறுபடியும்.

“நான் என்ன கொடுத்துக்கொண்டு இருக்கிறேன் என் பதை அறிய வேண்டும் என்பதால் கவனமாக இருக்க

வேண்டும் என்ற முடிவை எடுத்துக்கொண்டு தான் அன்று உங்களை சந்தித்துவிட்டு கிளம்பினேன்.

ஆனால் நான் வீட்டிற்கு போய்க்கொண்டிருந்தபோது என்னை தாண்டி ஒரு சிறுவன் வேகமாக வண்டியை ஓட்டி சென்றான். அப்போது என்னருகே நின்றிருந்த ஒருவர் 'எப்படி போகிறான் பாருங்கள்' என்று என்னிடம் கூறினார். அதற்கு நான்...

'எங்காவது போய் விழுந்தால் தான் அறிவு வரும்' என்று கூறினேன்." என்றார்

"இது சாதாரண விஷயம் தானே!" என்றேன்.

"இல்லை, இது சாதாரண விஷயம் என்றாலும் நான் கவனித்த பிறகு தான் இது எனக்குள் உள்ள மோசமான ஒரு குணத்தை காட்டியது." என்றார்.

"என்ன குணம்?"

"என்ன குணம் என்று உங்களுக்கு தெரியவில்லையா? அந்த சிறுவன் துன்பத்தை அனுபவிக்கட்டும் என்று நான் சபித்தது சரி என்று நினைக்கிறீர்களா?" என்றார் கொஞ்சம் காரமாக...

"தவறு தான், இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் நீங்கள் கவலைப்படும் அளவிற்கு இது பெரிய தவறு ஒன்றும் இல்லையே!!" என்றதற்கு...

"இதை சாதாரணமாக என்னால் எடுத்துக்கொள்ள முடியவில்லை" என்றார்

"ஏன்?"

“நான் யாருக்கும் எந்த தீங்கும் இதுவரை நினைத்த தில்லை என்றும், என்னை மட்டும் கடவுள் ஏன் இப்படி சோதிக்கிறார் என்று புலம்பியிருக்கிறேன்.” என்றார்.

“அதனால்” என்றேன் சிரித்தபடியே...

“சிரிக்காதீர்கள், நான் வேதனையில் பேசிக்கொண்டி ருக்கிறேன். நான் என்னை அறியாமல் பிறருக்கு துன்பம் நிகழட்டும் என்று எண்ணுகிறேன் என்பதை உணர்ந்து உடைந்து போயிருக்கிறேன். நான் கடவுள் கருணை காட்டும் அளவுக்கு நல்லவன் இல்லை என்று தோன்று கிறது” என்றார் சோகமாக...

“நான் சிரித்தது, உங்களை ஏளனம் செய்வதற்கு அல்ல, இதை போன்று நானும் என்னை கண்டு வெட்கி தலை குனிந்திருக்கிறேன். ஆனால் அதன் பிறகு என் வாழ் வில் அற்புதமான மாற்றங்கள் நிகழ்ந்தன. அவை உங் கள் வாழ்விலும் விரைவில் நிகழ போகின்றன என்ற சந் தோஷத்தில் தான் சிரித்தேன்” என்றேன்.

மௌனமாக என்னை பார்த்தார். ஆயிரம் அர்த்தங்கள். வார்த்தைகள் விவரிக்க முடியாததை மௌனங்கள் உணர வைத்துவிடும்.

“இதிலிருந்து நீங்கள் மற்றவர்களுக்கு சாபம் கொடுக் கவும் செய்கிறீர்கள் என்பதை தெரிந்துகொண்டீர்கள். நல்லது. இது போன்று வேறு ஏதேனும் சம்பவங்கள் நடந்ததா?” என்று கேட்டேன்.

“நடந்தது” என்றார்.

“ஒவ்வொன்றாக சொல்லுங்கள், அதிலிருந்து என்ன கற் றுக்கொண்டீர்கள் என்பதையும் சொல்லுங்கள்!” என் றேன்.

“மறுநாள் காலை என் நண்பர் சேதுவை சந்தித்தேன். அவரை சந்தித்து நீண்ட நாள் ஆன காரணத்தினால் நானும் அவரும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். அப்போது முருகன் என்பவரை பற்றிய பேச்சு வந்தது.

அவருடன் நெருங்கிய பழக்கம் இல்லை என்றாலும் நான் அவரை அறிவேன், என்னை பொறுத்தவரை அவர் மிகவும் மோசமான மனிதர். எனக்கு இப்படி ஒரு எண்ணம் தோன்ற காரணம் என்னவென்றால்...

என்னுடைய நண்பர் ஒருவர் முருகன் பண உதவி கேட்க, செய்தும் இருக்கிறார். ஆனால் முருகனோ அந்த பணத்தை திரும்ப தரவில்லை என்றும் மிக அதிக மன உளைச்சலுக்கு தான் ஆளானதாகவும் என்னிடம் கூறி யது தான்.

நான் அதை நினைவில் கொண்டு சேது ஒரு முறை முரு கனுக்கு பணம் கொடுக்க போவதாக என்னிடம் தெரி வித்த பொழுது, நான் அந்த நண்பருக்கு நடந்ததை எடுத்துக்கூறி கவனமாக இருக்கும்படி அறிவுறுத்தியி ருந்தேன்.

அது என் நினைவுக்கு வந்தது...

இதை பற்றி சேதுவிடம் கேட்டதற்கு, தான் முருக னுக்கு பணம் கொடுத்ததாகவும் அவர் அதை சரி யான தேதியில் திருப்பி தந்துவிட்டதாகவும், பணவரவு செலவு அவர்களுக்குள் இன்றுவரை நல்லபடியாக நடந் துகொண்டிருப்பதாகவும் என்னிடம் கூறினார்.

மேலும் அவர் என்னை பற்றி முருகனிடம் கேட்டதற்கு ‘அவர் நல்ல மனிதர், சிறந்த உழைப்பாளி’ என்று கூறிய தாகவும் கூறினார்.

நீங்கள் சொல்வது போல் அவர் ஒன்றும் மோசமான மனிதராக எனக்கு தோன்றவில்லை என்றும் சேது என்னிடம் கூறினார்.

அவர் என்னிடம் கூறிய விதம் என்னை சங்கடப்படுத்தியது" என்றார் குரு.

"இதிலிருந்து நீங்கள் என்ன உணர்வை கொடுத்ததாக அறிந்துகொண்டீர்கள்?" என்று கேட்டதற்கு.

"முருகனை பற்றி எதுவும் தெரியாத நிலையில், என்னை நல்லவர் என்று கூறுகின்ற ஒருவரை நான் மோசமானவர் என்று குறை கூறிக்கொண்டிருந்தேன்.

என்னை பற்றி குறை கூறியவர்களை கண்டு நான் கோபம் கொண்டு, என்னை பற்றி இவர்களுக்கு என்ன தெரியும், இவர்கள் என்னை குறை கூறுவதற்கு? என்று பேசியிருக்கிறேன். அதை தவறு என்று விவாதமும் செய்திருக்கிறேன். நான் இதைப்போன்று ஒருபோதும் செய்ததில்லை என்றும் நினைத்திருக்கிறேன்.

ஆனால் இன்று நான் என்ன செய்திருக்கிறேன் என்பதை பார்க்கும்போது இதை போன்ற பல சம்பவங்கள் என் நினைவுக்கு வந்தது. என் செயலை நினைத்து கொஞ்சம் கவலையாக தான் உள்ளது.

நானும் ஒருவரை பற்றி எதுவும் தெரியாமல் அவரை விமர்சிக்கும் பழக்கத்தை கொண்டிருக்கிறேன் என்பது தெளிவாக தெரிகிறது" என்றார்'

"அற்புதம், இதை தான் நீங்கள் முதலில் அறிந்துகொள்ள வேண்டும் என்று நான் எதிர்பார்த்தேன். ஏனென்றால், நீங்கள் மற்றவர்களை விமர்சிக்கும் பழக்கம் கொண்டவராக இருந்தீர்கள் என்றால் உங்கள்

தொழிலில் உள்ளவர்களிடமும் அதை தான் செய்வீர்கள்.

ஒருவேளை அவர் உங்களுக்கு வேலை கொடுப்பவராக இருப்பின் நீங்கள் கொடுத்த எதிர்மறை உங்களிடமே திரும்பி, பெரும் பாதிப்பிற்கு உள்ளாக்கும்" என்றேன்.

"சரி தான், நான் இதை அனுபவித்து இருக்கிறேன். ஒரு சிறிய விஷயத்தில் ஏற்பட்ட மனக்கசப்பு உறவையே துண்டிக்கும் அளவிற்கு போயிருக்கிறது" என்றார் கவலையோடு...

**"பிறரின் குணாதிசயங்களை சரியென்றும், தவறென்றும் கூற நாம் யார்? நம்மை பற்றியே நமக்கு இன்னும் முழுமையாக தெரியாத போது?!"**

"உண்மைதான்! இனி அதை செய்யமாட்டேன். அவரவர் பார்வையில் அவர் செய்வது சரியே, அதனால் தான் அவர்கள் அதையே செய்கிறார்கள். என் பார்வையில் அது தவறாக தோன்றுவதால் அது தவறாகிவிட்டது." என்றார்.

"சரி என்பதும் தவறு என்பதும் நம்முடைய கண்ணோட்டத்தை பொறுத்தது. அதனால் அதை கவனிக்காமல் எது தேவையோ அதை செய்வது தான் சரி" என்றேன்.

"புரிகிறது, இனி மற்றவர்களை எடை போடும் பழக்கத்தை அறவே விட்டு விடுகிறேன்." என்றார்.

"அதையும் மீறி உங்களுக்கு பிரியமானவர் தவறு செய்கிறார் என்று உங்களுக்கு தோன்றினால் அதை அவரிடமே நேரடியாக சென்று கேளுங்கள்.

ஒருவேளை அவர் தவறென்று உணர்ந்தால் திருத்திக் கொள்வார். இல்லையென்றால், ஏன் அதை செய்கிறார் என்பதை நாம் உணர்ந்து திருந்திக்கொள்ளலாம்" என் றேன்.

"சரிதான்! அது தான் சரி! நன்றி" என்றார்.

"நன்றி! உங்களை நீங்கள் உருவாக்கி கொண்டு இருக் கிறீர்கள் என்பது உங்களால் உணர முடிகிறதா?"

"ஆம்! முடிகிறது" என்றார்.

"அப்படியிருக்கும் போது நீங்கள் ஏன் இன்னும் கவலை யாக இருக்கிறீர்கள்?" என்றதற்கு.

"என்னை பற்றி எனக்கே தெரியவில்லை என்பதை நான் உணரும்போது கொஞ்சம் அதிகமாக தான் வலிக் கிறது." என்றார்

"முதல் முறை அப்படித்தான் இருக்கும், தவறு செய்வது குற்றமல்ல. இன்னும் ஆழமாக சொல்ல வேண்டுமென் றால் தவறுகளில் இருந்து தான் நாகரிகமே பிறந்தது.

அதனால் நீங்கள் கவலைப்பட தேவையில்லை. அத னால் எந்த பயனும் இல்லை. அதனால் அடுத்து என்ன செய்யலாம் என்று சிந்தியுங்கள்" என்றேன்.

"நீங்கள் எளிமையாக சொல்லிவிட்டீர்கள். ஆனால் என்னால் சாதாரணமாக எடுத்துக்கொள்ள முடிய வில்லை" என்றார் மீண்டும்...

"உங்கள் மனநிலை எனக்கு புரிகிறது, இந்த மனநிலை யில் நீங்கள் அதிக கவனத்துடன் இருக்க வேண்டும் என்று நான் வலியுறுத்துகிறேன். ஏனென்றால், நானும் இதை அனுபவித்து இருக்கிறேன். என்னுடைய மோச

மான குணங்களை நான் கண்டபோது மிகவும் மோசமான மனஅழுத்தத்திற்கு ஆளானேன்.

நாள் கணக்கில் வருந்தினேன். என்னுடைய எல்லா தவறுகளையும் சரி செய்ய வேண்டும் என்று முடிவு செய்து, என்னிடம் உள்ள தவறான குணங்களை கண்டுபிடிப்பதிலேயே கவனம் செலுத்தினேன்." என்றவுடன்...

"நானும் அப்படி கவனம் செலுத்தலாமா?" என்றார் ஆர்வத்தோடு.

"பார்த்தீர்களா! இதற்காக தான் நான் கவனமாக இருக்கும்படி கூறினேன். இந்த அவசர மனநிலை உங்களை மேலும் எதிர்மறையாளராக ஆக்கிவிடும். அதனால் நீங்கள் எப்படி கவனம் செலுத்த வேண்டும் என்பதை நான் சொல்கிறேன். நான் சொல்வதை முழுமையாக கேளுங்கள் அதன் பிறகு நீங்கள் கேள்விகள் கேளுங்கள்" என்றேன்.

"நீங்கள் சொல்வது சரிதான். எப்படியாவது என் தவறுகளை விரைவாக திருத்திக்கொள்ள வேண்டும். அப்போதுதான் நான் நினைத்தது எல்லாம் நடக்கும் என்ற அவசரம் எனக்குள் இருக்கத்தான் செய்கிறது!!" என்றார்.

"பரவாயில்லை, இதே அவசரம் தான் என்னையும் அப்போது ஆட்டி படைத்தது. எதை செய்தாலும் வேகமாக செய்து என்னை சரி செய்துகொள்ள வேண்டும் என்று உந்திக்கொண்டே இருந்தது" என்றதும்...

"எப்படி வெளியில் வந்தீர்கள்" என்று கேட்டார்.

"வெளியே வரவேண்டும் என்ற முயற்சியில் அவசரம் கொண்டதால் நான் மேலும் அதில் போய் சிக்கி கொண்டேன்" என்றதும்.

“என்ன சொல்கிறீர்கள், எப்படி நடந்தது?” என்றார் கவலையாக.

“நாம் கவனமாக தான் இருக்கின்றோம் என்று நாம் நினைக்கும் பல தருணங்களில் நாம் அப்படி இருப்பதில்லை என்பதை உணர்வதில்லை. நானும் இந்த தவறை செய்தேன்.

ஒவ்வொரு நொடியும் நான் என்ன உணர்வை கொடுத்துக் கொண்டு இருக்கிறேன் என்பதை பார்க்க தொடங்கினேன். இது சரிதானா என்று கூட சிந்திக்கவில்லை.

நான் என்ன தவறு செய்து கொண்டிருக்கிறேன் என்பது எனக்கு தெரிய தொடங்கினாலும், இந்த தவறுகள் என்னை கவலைக்குள்ளாக்கின. என்னை தாழ்வாக நினைக்க வைத்தன. இதெல்லாம் எனக்குள் நடக்கிறது என்பது அப்போது எனக்கு தெரியாது.” என்றவுடன்.

“நீங்கள் சொல்வதுபோல் தான் நானும் இரண்டு நாட்களாக கவனித்துக்கொண்டு இருக்கிறேன். நான் சரியில்லை என்பதையும் உணர்கிறேன்” என்றார் கவலையோடு.

“நல்லது, இனி அப்படி செய்யாதீர்கள்” என்றேன்.

“இதற்க்கு என்ன தான் வழி?” என்று கேட்டார்.

“சொல்கிறேன், ஆறு மாதங்களாக நான் இதை தான் செய்தேன். அதனால் நான் முற்றிலுமாக தவறானவன் என்ற எண்ணம் எனக்குள் உருவாகிவிட்டது. இதை ஒரு நாள் கவனித்தபோது தான் நான் எவ்வளவு பெரிய தவறை தொடர்ந்து செய்திருக்கிறேன் என்பது புரிந்தது. உச்சகட்ட அழுத்தம்.”

"என்ன செய்தீர்கள்! எப்படி வெளியில் வந்தீர்கள்? என்னால் இதை நினைத்துக்கூட பார்க்க முடியவில்லை" என்றார்.

"உண்மைதான்! இப்பொழுது நான் கூட அதை நினைத்து பார்க்க விரும்பவில்லை! ஆனால் அது அந்த தவறு கூட நன்மை என்று நினைக்கிறன்"

"எப்படி?" என்றார்.

"மற்றவர்களை இந்த அழுத்தத்தில் விழாமல் என்னால் பார்த்துக்கொள்ள முடிகிறது."

"உண்மைதான், நன்றி. என்னையும் காப்பாற்றியிருக்கிறீர்கள். நான் இப்பொழுது என்ன செய்ய வேண்டும்?" என்றார்.

"முதலில் ஒரு விஷயத்தை மட்டும் தேர்ந்தெடுங்கள். உதாரணத்திற்கு, நாம் இப்பொழுது பணத்தை பற்றி பேசிக்கொண்டு இருப்பதால் அதையே எடுத்து கொள்வோம். பண விஷயத்தில் நீங்கள் என்ன உணர்வை கொடுக்க வேண்டும் என்பதை தீர்மானியுங்கள்" என்றவுடன்.

"சந்தோசத்தை, நன்றியை" என்றார்.

"சரியாக சொன்னீர்கள்! அவ்வளவு தான். இதையே பயிற்சி செய்யுங்கள். ஒவ்வொரு முறையும் நீங்கள் பணத்தை கையாளும் போதும் நல்ல உணர்வை வெளிப்படுத்துவதை உறுதி செய்யுங்கள். தொடக்கத்தில் கொஞ்சம் கஷ்டமாக இருக்கும். அதோடு நீங்கள் என்ன தவறு செய்கிறீர்கள் என்பதும் உங்களுக்கு தெரியவரும்.

தெரிந்துகொள்ளுங்கள். அதற்காக உணர்ச்சி வயப்ப டாதீர்கள். அதுதான் சிக்கல். ஏனென்றால் தீமையை ஒழிக்க முடியாது. நன்மையை விதைக்கும் போது தீமை தானாய் அழிந்துவிடும்." என்றேன்.

"புரிகிறது! அப்படியென்றால் நான் என்ன கொடுக்கி றேன் என்பதை கவனிக்க தேவையில்லையா? கவ னிக்க சொன்னீர்களே!" என்றார்.

"நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள் என்பது தெரிந்தால் தான் என்ன செய்ய வேண்டும் என்பது புரி யும். அதனால் தான் கவனிக்க சொன்னேன்.

தெரிந்துகொள்ள வேண்டுமே தவிர அதை பற்றிய கவ லைக்குள் சிக்கி கொள்ளக்கூடாது!

எதிர்மறை என்ன இருக்கிறது என்பது தெரிந்தவுடன் அதற்குரிய நேர்மறை உணர்வுகளை தேர்ந்தெடுத்து நாம் கொடுக்க வேண்டும்." என்றேன்.

"இப்பொழுது புரிகிறது! நான் என்ன செய்ய வேண்டு மென்றால், பணத்தை பற்றிய என் இயல்பான உணர் வுகளை கவனித்து, அதில் எதிர்மறை இருக்குமா னால் அந்த விஷயங்களில் நல்ல உணர்வை தருவதை தொடர்ந்து பயிற்சி செய்ய வேண்டும்" என்றார்.

"ஆம்"

"பணத்தை வாங்கும்போதும், கொடுக்கும்போதும், அதை பற்றி பேசும்போது கூட நான் நல்லதையே பேச தொடங்க வேண்டும். இல்லையா?" என்றார்

"ஆம், அதோடு பணத்தை உங்களிடம் கொண்டு வர காரணமாயிருக்கும் ஒவ்வொரு மனிதர்களிடமும் நல்ல உணர்வை கொடுங்கள். ஒவ்வொரு பொருட்களை பற்

றியும் நல்ல விதமாக உணருங்கள். நன்மை தான் இங்கே அதிகம்.

இதை இன்னும் சுலபமாக்க நீங்கள் 4 நாட்களுக்கு ஒரு முறை உங்கள் பண வரவு செலவு பற்றியும், காரணமா யிருந்த மக்களை பற்றியும் நன்றியை உணருங்கள். எழு துங்கள்.

உங்கள் தொழில் மீது உங்களுக்கு எப்போதும் நன்றியு ணர்வு இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு இரு முறை யாவது உங்கள் தொழில் நல்லபடியாக நடக்க காரண மாயிருக்கும் விஷயங்களை பற்றி சிந்திக்கலாம்" என் றேன்.

"அப்படியே செய்கிறேன். மக்களின் துணை இல்லாமல் நான் இங்கு எதுவும் செய்ய முடியாது. அதனால் அவர் களின் பங்களிப்பை நான் மதிக்க வேண்டும். இல் லையா?" என்றார்

"உண்மை. எப்போதும் நாம் நன்றி செலுத்த கடமை பட் டிருக்கிறோம்" என்று முடித்தேன்.

"நன்றி! இன்னொரு கேள்வி?"

"கேளுங்கள்" என்றேன்.

"நீங்கள் தொடர்ந்து தவறுகளை கண்டறிய முற்பட் டதனால் உச்சகட்ட மனஅழுத்தத்திற்கு ஆளானதாக சொன்னீர்கள். எதனால் அப்படி நடந்தது என்று தெரிந் துகொள்ள விரும்புகிறேன்" என்றார்.

"சொல்கிறேன். நான் தவறுகளை கண்டறிய முயல்வ தையே முழுநேரமும் செய்ததால், என்னுடைய நல்ல உணர்வு நிலையை இழந்துவிட்டேன். எப்போதும் சோகமாக இருப்பது போல் உணர்வேன். இந்த உணர்

வினால் நான் மேலும் தவறுகள் செய்வதற்கான சூழ லையே என் வாழ்வில் உருவாக்க தொடங்கினேன்.

இதனால் மேலும் பல தவறுகளை கண்டுபிடித்தேன். தவறுகள் மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே போனது. நான் போதுமான தகுதியோடு இல்லை என்று உணர ஆரம்பித்தேன். கவலையும், அவசரமும் சேர்ந்து கொண்டது. நிலைமை இன்னும் மோசமானது.

என்ன செய்வதென்று தெரியவில்லை. என்னால் எப்படி யும் சரிசெய்ய முடியும் என்ற ஆணவம் தோற்று போனது.

பிரபஞ்சத்திடம் மண்டியிட்டேன். இதிலிருந்து என்னை காப்பாற்றிக்கொள்ள வழி சொல் என்று கதறினேன்.

'உன் முயற்சிகளை நிறுத்து'

என்று என் உள்ளுணர்வு மூலம் எனக்கு பதில் கிடைத் தது. என் முயற்சிகளை நிறுத்தினேன். ஒரு மாத காலம் எந்த முயற்சியும் செய்யவில்லை. கொஞ்சம் கொஞ்ச மாக அதிலிருந்து மீண்டு வந்தேன். மனம் சமநிலையை அடைந்தது.

அதன் பிறகு நான் என்ன தவறு செய்தேன் என்று என் னால் தெளிவாக பார்க்க முடிந்தது.

முடிந்து போன விஷயங்களை நம்மால் மாற்ற முடியாது, அதை ஏற்றுக்கொண்டு புதியதை உருவாக்கும் முயற் சியே எனக்கு தேவை என்பதை கண்டுகொண்டேன்.

அன்றிலிருந்து எனக்கு தெரியாததை ஒப்புக்கொண்டு பிரபஞ்சத்திடம் கேட்டு பயணம் செய்ய தொடங்கி னேன். சந்தோசமாக இருக்கிறேன். என்னை வழிநடத் திக்கொண்டு இருப்பது அது தான்.

உங்களையும் வழி நடத்தும் நீங்கள் அனுமதித்தால்!!" என்று முடித்தேன்.

"நிச்சயமாக செய்கிறேன்! நன்றி! நான் இதை முயற்சிக் கிறேன். அடுத்து நாம் எப்பொழுது சந்திக்கலாம்?" என் றார்.

"10 நாட்களுக்கு பிறகு சந்திப்போம், அடுத்த படியை பற்றி பேசுவோம்" என்றேன்.

"நிச்சயமாக! காத்திருக்கிறேன். நன்றி" என்று கூறி விடைபெற்று கொண்டார்.

உங்களை பற்றி நீங்கள் அறிந்து கொண்டு, உங்க ளுக்கு தேவையானதை நீங்கள் உருவாக்க முயற்சிக் கும் போது தான் உங்கள் வாழ்க்கை நிரந்தரமான மாற் றத்தை அடைகிறது .

இந்த முயற்சி இல்லாமல் நீங்கள் வேண்டும் ஒவ்வொரு ஆசையும், கனவாகவே இருக்கும்.

**மாற்றத்தை விரும்பும் நாம் மாறவும் தயாராக இருக்க வேண்டும்.**

நீங்களும் பணத்தை பற்றிய நல்ல உணர்வை கொடுக்க பயிற்சி மேற்கொள்ளுங்கள். நல்ல பலனை பெறுவீர்கள். நன்றி.

அடுத்த சந்திப்பில் என்ன நிகழ போகிறது என்பதை அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

## அத்தியாயம் 6

# சந்தோசத்தை தேடி...

நம் அனைவரின் இலக்கும் சந்தோசமாக இருப்பது தான். அதை தேடி தான் நம் பயணம் தொடங்கியது. ஆனால் இன்று அந்த பயணத்தில் நாம் இருக்கிற சந் தோஷத்தையும் இழந்து நிற்கிறோம் என்ற நிலை தான் பலரது வாழ்க்கையில் உள்ளது.

இப்படி நிகழ காரணம் என்ன? நாம் பாதை மாறிவிட் டோம் என்ற விழிப்பு கூட இல்லாமல் நாம் எங்கே சென்று கொண்டிருக்கிறோம் என்ற கேள்வி நம் ஒவ் வொருவர் மனதிலும் எழுந்தாக வேண்டும். இல்லை யென்றால் நாம் தொடர்ந்து சந்தோசத்தை தேடியே வாழ்க்கையை இழந்து விடுவோம்.

நாம் தேடுவதை அடைய எப்போதும் இயற்கை துணை நிற்கிறது என்பது நாம் மறுக்க முடியாத உண்மை. ஆனால் அதை நாம் சந்தோசமாக தேடும் போது தான் அதன் வழிகாட்டுதலை நாம் பெற முடியும் என்பதும் உண்மை.

குருவிற்கு இந்த உண்மை புரிந்திருக்கிறதா என்பதை அறிய வேண்டும். அப்போது தான் அவருக்கான அடுத்த செயல்முறை என்ன என்பதை முடிவு செய்ய முடியும். அவரை சந்திக்கும் நாள் வரை காத்திருந்தேன்.

அந்த நாளும் வந்தது...

காலையில் தொலைபேசி மூலம் என்னை தொடர்பு கொண்டார். என் வீட்டிலேயே சந்திப்பை நிகழ்த்து வோம் என்று முடிவு செய்தோம்.

மாலை 5 மணி...

என் வீட்டு மாடியில் நின்று ஆகாயத்தை சந்தோச மாக பார்த்து ரசித்து கொண்டிருந்தேன். நான் தனியாக இருக்கிறேன் என்று உணர்ந்த போதெல்லாம் உன் னோடு நான் இருக்கிறேன் என்று உணர்த்துவது ஆகா யம் தான். மெல்லிய காற்று என்னை வருட, ஆகாயத்தை பார்த்தபடி நின்றிருப்பதே ஒரு அலாதியான சுகம் தான்.

குருவும் வந்துவிடவே, அவரையும் சிறிது நேரம் இந்த மாலை நேரத்தை அனுபவியுங்கள் என்று கூற அவரும் அமைதியாய் என்னுடன் ஆகாயத்தை ரசித்தார்.

20 நிமிடங்கள் கழித்து...

“எப்படி போனது இந்த 10 நாட்களும்” என்று குருவிடம் கேட்டேன்.

“சந்தோசமாக” என்ற அந்த பதில் என்னையும் சந்தோச படுத்தியது.

“நல்லது! பணத்தை பற்றி நீங்கள் என்ன உணர்வு களை கொடுக்கிறீர்கள் என்று கவனித்தீர்களா! ஏதே னும் மாற்றம் தோன்றியதா?” என்று கேட்டதற்கு.

“முதலில் உங்களுக்கு நன்றி!” என்றார்

“என்ன நடந்தது?”

“நீங்கள் அன்று எனக்கு கொடுத்த தெளிவினால் நான் அந்த அழுத்தத்தில் இருந்து வெளியில் வந்தேன். நீங்

கள் கூறியது போல் ஒரே ஒரு விஷயத்தை கையில் எடுத்தேன். அது பணம்.

மெதுவாக முயற்சித்து முதலில் இதை சரி செய்வோம் என்று முடிவு செய்தேன். 6 மாதங்கள் ஆனாலும் பரவா யில்லை தொடர்ந்து அவசரம் இல்லாமல் முயற்சி செய் வோம் என்று முடிவு எடுத்ததால் என் மனம் அமைதியா னது. நிம்மதி அடைந்தேன்" என்றார்.

"சந்தோசம். சரியான முடிவு!" என்றேன்.

"பிறகு என்ன நடந்தது?" என்றேன்.

"பணத்தை பற்றிய ஒரு தவறான கண்ணோட்டத் தில் தான் நான் இருந்திருக்கிறேன் என்பதை கண்டு கொண்டேன்" என்றார்.

"எப்படி"

"உங்களை சந்தித்த மறுநாள் வழக்கம் போல் என் வேலைகளை செய்தாலும் பணத்தை பற்றி பேசும் போது, அதற்குரிய செயல்கள் செய்யும்போது மட்டும் கவனிக்க வேண்டும் என்று முடிவு செய்தேன்." என்றார்.

"சரி"

"ஆனால் என்னால் எல்லா நேரமும் கவனிக்க முடிய வில்லை, 2 முறை தான் அன்று கவனிக்க முடிந்தது." என்றார்.

"இதை நினைத்து கவலை கொண்டீர்களா? நம்மால் முழுவதும் கவனிக்க முடியவில்லையே என்று!!"

"கவலை வந்தது, ஆனால் கூடவே ஒரு சிறு எண்ணம் தோன்றியது. என்னவென்றால், நேற்று எதையுமே கவ னிக்கவில்லை இன்று 2 முறையாவது கவனித்திருக்கி

றோமே, அது போதும். நாளை இதை இன்னும் ஒரு முறையாவது அதிகபடுத்தி கொள்வோம் என்று. அத னால் மனம் சந்தோஷமும் நிம்மதியும் அடைந்தது" என் றார்.

"சரியாக செய்தீர்கள், சந்தோசம்! இல்லையென்றால் அந்த கவலை உங்களை எதிர்மறையில் சிக்க வைத்தி ருக்கும்! அற்புதம்!"

"உங்களுக்கு நடந்ததை கேட்டதால் தான் என்னால் இப்படி யோசிக்க முடிந்தது." என்றார்

"நல்லது"

"நீங்கள் முன்பே பணம் என்றால் என்ன என்பதை பற்றி யும் அது எப்படி இயங்குகிறது என்பதை பற்றியும் தெளி வாக எடுத்து கூறினீர்கள். ஆனால் அதை நான் கேட்டு கொண்டேனே தவிர அதை உணரவில்லை என்பதை அடுத்த நான்கு நாட்களில் தெரிந்துகொண்டேன்.

பணத்தை கையாளும் போதும், அதை பற்றி பேசும் போதும் ஏதோ ஒரு கவலை என் மனதில் இருந்து கொண்டே தான் இருந்தது.

என்னவாக இருக்கும் என்று கவனிக்க முயற்சித்த போது, போதுமான பணம் என்னிடம் இல்லையே என்ற கவலை தான் அது என்று கண்டு கொண்டேன்." என் றார்.

"சரி, அந்த கவலையை போக்க ஏதேனும் முயற்சித்தீர் களா?" என்று கேட்டதற்கு.

"முயற்சிக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் அதை எப்படி செய்ய வேண்டும் என்பது எனக்கு தெரி

யாது என்பதால் நான் அப்படியே விட்டுவிட்டேன்" என்றார்.

"சரியாக செய்தீர்கள்" என்றேன்.

"என்ன சொல்கிறீர்கள்? நான் செய்தது சரியா? நான் அந்த கவலையை உணர்வதால் அதை மீண்டும் மீண்டும் அடைவேன் இல்லையா?" என்றார் அதிர்ச்சியோடு...

"உண்மைதான், ஆனால் அந்த கவலையை போக்க நீங்கள் என்ன செய்திருப்பீர்கள் என்று சொல்லுங்கள்"

"தெரியவில்லை" என்றார்.

"பொதுவாக அதற்க்கு நேர்மறையான நம்பிக்கையை கொடுக்க முயற்சி செய்வோம். நமக்கு புதிய வாய்ப்புகள் உருவாகும் என்றோ, நமக்கு இந்த வழிகள் மூலம் பணம் கிடைக்க வாய்ப்பிருக்கிறது என்றோ சமாதானம் செய்வோம். இல்லையா!" என்றதற்கு.

"ஆம்! அப்படி செய்வதால் நம் கவலை போகும் இல்லையா!" என்றார்

"போகாது!"

"ஏன்? எதனால்?" என்றார்

"ஏனென்றால், அந்த கவலையை நீங்கள் ஏற்றுக்கொள்வதற்கு மாறாக அதை உண்மை இல்லை என்று நீங்கள் சமாதானம் செய்ய முயற்சி செய்யும் போது அந்த கவலை அழிவதற்கு மாறாக இன்னும் ஆழமாக சென்று அமரும்"

"நான் இதை உணர்ந்திருக்கிறேன். எவ்வளவு சமாதானம் சொன்னாலும் சில கவலைகள் என்னை விட்டு நீங்கியதே இல்லை" என்றார்

“அது தான் உண்மை! நீங்கள் ஒரு உணர்வை எந்த சமாதானமும் செய்யாமல் முழுமையாக அனுமதிக்கும் போது அது உங்களை தொந்தரவு செய்வதில்லை. மாறாக நிம்மதி அடைவீர்கள்.

அதன் பிறகு நீங்கள் உங்களுக்கு சாதகமான அல்லது தேவைப்படுகிற சூழல்களை நினைத்து பார்த்தால் நீங் கள் முழுமையாக சந்தோசத்தை அனுபவிக்க முடியும். அந்த உணர்வு முழுமையாக உணரப்படுவதினால் அது போன்ற நல்ல சூழல்களை உருவாக்க தொடங்குவீர் கள். அது உங்கள் சந்தோசத்தை இன்னும் அதிகரிக் கும்.” என்றேன்.

“இப்பொழுதுபுரிகிறது! நான் சந்தோசமாக இருக்க கார ணம் என்னவென்று! ஆனால் என்னை அறியாமல் இதை எப்படி செய்தேன் என்று தான் எனக்கு தெரிய வில்லை” என்றார்

“என்ன செய்தீர்கள் என்று சொல்லுங்கள்! அது எப்படி நடந்திருக்கும் என்பதை நான் சொல்கிறேன்.”

“நான் போதுமான பணம் இல்லையே என்று கவலை படுகிறேன் என்பதை உணர்ந்த நாள் அன்றெல் லாம் இரவு அதை மறக்காமல் எழுதிக்கொண்டேன். வேறொன்றும் செய்யவில்லை. ஐந்து நாட்களுக்கு பிறகு என் கவலை குறைந்ததை உணர்ந்தேன். சந்தோசமாக இருந்தது

அதையும் அப்படியே எழுதிக்கொண்டேன். ‘என் கவலை குறைந்தது’ என்று. இப்போதெல்லாம் அந்த கவலை இல்லாமல் இருப்பதை என்னால் உணர முடிகி றது.” என்றார்.

**"கலங்கிய நீரை அப்படியே விட்டு விட்டால்
அது தானாக தெளிந்து விடும்"**

"இது புத்தர் கூறிய பொன்மொழி மனதிற்காக. அதை தான் நீங்கள் செய்துள்ளீர்கள். உங்கள் மனம் தானாக தெளிந்து விட்டது." என்றேன்.

"அப்படியென்றால் நான் கவனிக்காவிட்டாலும் தெளிந் திருக்க வேண்டுமே! ஆனால் இதுவரை அப்படி நடக்க வில்லையே?" என்றார்.[22]

"இதுபோல என்றும் இருந்ததில்லையே, அப்புறம் எப்படி இதுபோன்று நிகழும்?" என்றேன்.

"எனக்கு புரியவில்லை!?" என்றார்.

"நீங்கள் பணத்தை பற்றி கவலை படுகிறீர்கள் என்பதை கவனிக்காததால் உங்கள் மனம் அந்த கவலையை போக்க சிந்தனையை தூண்டியது.

எப்படி என்றால்...

இதை செய்வோமா இல்லை அதை செய்தால் பணம் சம்பாதிக்கலாமா?

இவரை சந்திப்போமா? இந்த வேலையை சீக்கிரம் முடித்தால் நமக்கு அதிக லாபம் கிடைக்கும்!!

என்று இதுபோன்ற பல சிந்தனைகளை உருவாக்கி உங்களை செயல்பட தூண்டும். தூண்டியது இல் லையா?" என்றதற்கு.

"ஆம், எவ்வளவு முடியுமோ அவ்வளவு முயற்சிகள் செய் திருக்கிறேன்" என்றார்.

“பலனை கண்டீர்களா?”

“இல்லை! இன்னும் அதிக கவலையையும் சோர்வையும் தான் அடைந்தேன்” என்றார்

“இப்பொழுது புரிகிறதா நீங்கள் ஏன் கவனிக்க வேண் டும் என்று?”

“நன்கு புரிகிறது” என்றார்

“அவ்வளவுதான், இன்னொரு கேள்வி கேட்டீர்கள், எப் படி என்னை அறியாமல் இதை சரியாக செய்தேன் என்று ?“

“ஆம்” என்றார்

“உங்கள் நோக்கம் சரியான திசையில் இருந்ததும் அதற்க்கு பிரபஞ்சம் உங்களுக்கு வழிகாட்டியதும் தான் காரணம்”

“என்ன சொல்கிறீர்கள்? எப்படி?” என்றார்

“பணத்தை பற்றி நான் என்ன உணர்வை கொண்டி ருக்கிறேன் என்பதை கண்டுபிடிக்க வேண்டும் என் றும், அதையும் அவசரம் இல்லாமல் நிதானமாக செய்ய வேண்டும் என்றும் ஒரு தெளிவான முடிவை எடுத்தீர் கள். இல்லையா?”

“ஆம்” என்றார்

“தெளிவான முடிவிற்கு அந்த பிரபஞ்சமே துணை நிற் கும். அது தான் உங்கள் நோக்கத்தை நீங்கள் அடைய சரியான வழியை காட்டி உங்களை இப்படி செய்ய வைத் தது”

‘ஆச்சர்யமாக இருக்கிறது! சந்தோசமாகவும் இருக்கிறது” என்றார்.

“பிரபஞ்சத்தை பொறுத்தவரை என்ன தேவை என்றால்,

**ஒரு தெளிவான முடிவு மற்றும் அதை நோக்கி பயணிக்க தயாராய் இருக்கும் ஒரு மனது.**

இவை இருந்தால் பிரபஞ்சமே உங்களுக்கு துணையாய் நிற்கும். நீங்கள் எதை வேண்டுமென்றாலும் உருவாக்கலாம்”

“எப்படி ஒரு வாழ்க்கை நமக்கு கிடைத்திருக்கிறது” என்றார் நெகிழ்வோடு.

“ஆம்! அற்புதமான வாழ்க்கை! நாம் எல்லாரும் கொண்டாட வேண்டிய ஒரு வாழ்க்கை!!” என்றேன்.

சிறிது நேர மௌனத்திற்கு பிறகு நான் பேச தொடங்கினேன்...

“நீங்கள் கவலையை மட்டும் எழுதி கொண்டீர்களா இல்லை நல்ல உணர்வு வெளிப்பட்டதையும் எழுதி கொண்டீர்களா” என்றதற்கு .

“இரண்டையும் தான். ஆனால் கவலை ஓரிரு நாட்களுக்கு மேல் நான் எழுதவில்லை ஏனென்றால், என் கவலை காணாமல் போயிருந்தது. ஆனால் சந்தோச உணர்வை கொடுத்ததை நேற்று வரை எழுதியிருக்கிறேன்” என்றார்.

“சந்தோசம்”

“எனக்கு ஒன்று புரியவில்லை! ஏன் கவலை சீக்கி ரம் காணாமல் போனது, ஏன் சந்தோசம் தொடர்கிறது.” என்று கேட்டார்.

“மிகவும் கவனிக்க வேண்டிய ஒரு விஷயம் இது. நீங்கள் கவலையை வெறுமனே கவனித்தீர்கள் அதோடு அது இருந்தது என்று மட்டும் எழுதி கொண்டீர்கள். அதற்கு மேல் எந்த ஈடுபாடும் காட்டவில்லை. ஏனென்றால், அது உங்களுக்கு தேவையும் இல்லை. அதனால் அது மறைந்தது.

சந்தோசத்தை நீங்கள் எழுதியது மட்டும் அல்லாமல் அதை அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணமும், அதில் ஒரு ஈடுபாடும் வந்தது. அதனால் சந்தோசம் அதிகரித் தது. அதோடு சந்தோசம் தானாக உருவாகவில்லை நீங் கள் கவனம் கொடுத்து அதை உருவாக்கினீர்கள் அத னால் அது வளர்ந்துகொண்டே செல்லும்.

நாளையும் சந்தோசத்தை அதிகரிக்க வேண்டும் என்ற நோக்கம் உங்கள் சந்தோசத்தை பலமடங்காக அதிக ரிக்க செய்யும்.

உங்கள் கவனம் போகும் இடத்தில் சக்தி பாயும்

இது தான் இயற்கையின் விதி. இன்னொன்றையும் நீங் கள் கவனிக்க வேண்டும்.
என்னவென்றால், கவலையை போக்க வேண்டும் என்று நீங்கள் ஈடுபாடு காட்டிய போது உங்கள் கவலை அதிக ரித்தது தானே?” என்றேன்

“ஆம்! பலமடங்காக” என்றார்.

"இப்பொழுது உங்களுக்கு புரிந்திருக்கும் என்று நம்புகி றேன்" என்றேன்

"நன்றாக புரிந்தது! கவலையை போக்க முயற்சிக்கா மல், சந்தோசத்தை அதிகரிக்க நோக்கம் கொண் டால் வாழ்க்கை எப்போதும் ஆனந்த கொண்டாட்டமாக இருக்கும். அப்படித்தானே?!" என்றார்.

"சரியாக சொன்னீர்கள்" என்றேன்.

"மிகவும் சந்தோசமாக இருக்கிறேன்! உங்களுக்கு நன்றி" என்றார்.

"நன்றி! உங்களின் சந்தோசம் எங்கே இருக்கிறது?" என் றதற்கு.

"என்னிடம் தான். என்னுடைய சிந்தனையில் தான் இருக்கிறது" என்றார்

"சந்தோசம்! கண்டு கொண்டீர்கள். இந்த சந்திப்பு நிகழ் வதற்கு முன் உங்களிடம் கேட்க வேண்டும் என்ற கேள்வி ஒன்று இருந்தது. ஆனால் அதற்கான பதில் இப்பொழுது எனக்கு கிடைத்துவிட்டது" என்றேன்.

"என்ன கேள்வி?" என்றார்.

"உங்கள் தேடலுக்கு பிரபஞ்சம் துணை நிற்கும் என் பதை உங்களால் ஏற்று கொள்ள முடிகிறதா ? என்பது தான் அந்த கேள்வி" என்றேன்.

"இதற்கு முன் வரை நம்ப முடியாத ஒன்றாக தான் இருந் தது, ஆனால் கடந்த பத்து நாட்களில் நடந்த சம்பவங் கள் அதை அனுபவபூர்வமாக உணர வைத்துவிட்டன. ஏனென்றால் அது எதுவும் என் அறிவினால் நடந்தது இல்லை என்று எனக்கு தெளிவாக தெரிகிறது" என்றார்.

“உண்மை! மிக சந்தோசம்!! உங்கள் சந்தோஷத்தை யும் நீங்கள் உங்களுக்குள் இருக்கிறது என்று கண்டு கொண்டீர்கள் இல்லையா?” என்றேன்

“ஆம்!” என்றார்

“எப்படி என்று கூற முடியுமா? ஏனென்றால் பணம் இருந் தால் தான் சந்தோசம் என்ற எண்ணம் தானே உங்க ளுக்கு இருந்தது. அது எதனால் மாறியது என்று நான் தெரிந்துகொள்ளலாமா?” என்றேன்.

“உண்மைதான்! அந்த தேடலோடு தான் உங்களி டம் உரையாட ஆரம்பித்தேன். ஆனால் இன்று அதை அடைய முடியும் என்ற எண்ணம் வந்த பிறகு ‘அடுத்து என்ன?’ என்ற கேள்வி மனதிற்குள் வந்தது.

பணம் இன்று போதுமான அளவு இல்லை என்றாலும், அதை அடைய கூடிய வழிகள் உருவாவதை காண்கி றேன் அதோடு அதை அடைய முடியும் என்ற எண்ணம் வந்ததும் என் கவலைகள் காணாமல் போனது.

பணம் சம்பாதிப்பது மட்டும் தான் என் வேலை என்று எப்போதும் நினைத்து கொண்டிருந்த எனக்கு அதை சம்பாதிப்பது பிரச்சனை இல்லை என்றவுடன் ஒரு வெற் றிடம் உருவானது போல் தோன்றியது. அது சரியா என்று கூட எனக்கு தெரியவில்லை” என்றார்.

“உண்மைதான்! எதை வாழ்நாள் இலக்கு என்று கரு துகிறோமோ அதை அடையக்கூட தேவையில்லை, அடைய முடியும் என்ற நம்பிக்கை வந்தாலே நம் மனம் அமைதியாகி விடும். அப்போது வெற்றிடம் தோன்றும். அடுத்த இலக்கு மனதிற்கு வரும்வரை இந்த வெற்றிடம் தொடரும். இந்த வெற்றிடம் சில உண்மைகளை உங்க ளுக்கு காட்டும். நீங்கள் அறிந்தது என்ன?” என்றதற்கு.

“இந்த அமைதியினால் என்னை சுற்றி நிகழும் நிறைய விஷயங்களை என்னால் காண முடிந்தது. அது எனக்கு சந்தோசத்தை தந்தது.

எந்த ஒரு பெரிய காரணமும் இல்லை என்பதுதான் எனக்கு இன்னும் ஆச்சர்யமாக இருந்தது. என் வீட்டு வாசலில் ஒரு பூச்செடி உண்டு. காலையில் எழுந்தவுடன் எதார்த்தமாக அந்த செடியை பார்த்த போது இரண்டு பூக்கள் பூத்திருந்தது. அதை கண்டதும் ஒரு ஆனந் தம். இதுவரை இதையெல்லாம் நான் அனுபவித்ததே இல்லை” என்றார்

“அருமை! அதனால் தான் உங்கள் சந்தோசம் உங்களி டம் என்று கூறினீர்களா?” என்றதற்கு.

“ஆம்!, இதுபோன்ற சிறிய விஷயங்கள் கூட சந்தோ சத்தை தரும் என்று நான் அப்போதுதான் கண்டு கொண்டேன். நான் இயல்பாகவே சந்தோசத்தை அனு பவிப்பவன் தான். ஆனால் என் சிந்தனைகள் தான் என் சந்தோசத்தை கொன்றிருக்கின்றன என்று தோன் றியது” என்றார்.

“உண்மை!”

“மனம் அமைதியில் இருக்கும் போது நம்மை சுற்றியுள்ள ஒவ்வொன்றையும் ரசிக்க முடிகிறது. அந்த சந்தோசம் தனி சுகம் தான்” என்றார் நெகிழ்வோடு.

“எனக்கு வார்த்தைகளே வரவில்லை! ஆனால் ஒன்று மட்டும் புரிகிறது, நீங்கள் வாழ்க்கையை அனுபவிக்க துவங்கி விட்டீர்கள் என்று. வாழ்த்துக்கள்” என்றேன்.

“நன்றி! ஆனால் அவ்வப்போது இந்த அமைதி தொட ருமா என்ற சந்தேகம் வருகிறது.” என்றார்.

“இயல்பாக வருவதுதான்! அதை பற்றி சிந்திக்காதீர்கள். உங்களுக்குள் சிந்தனை அதிகமாகும் போதெல்லாம், நீங்கள் என்ன சிந்திக்கிறீர்கள் என்ற கவனம் கொள் ளுங்கள். இந்த முறை செய்தது போலவே! உங்கள் மனம் எப்போதும் அமைதியாய் இருக்கும்” என்றேன்.

“சரி தான். நான் தான் இதை உருவாக்கினேன். அத னால் மறுபடியும் இதை என்னால் உருவாக்க முடியும் தானே! இது தோன்றாமல் போனதே!!” என்றார் ஆச்சர் யமாக.

“அதே தான்! நீங்கள் சந்தோசமாக இருப்பதை இனி யாராலும் தடுக்க முடியாது” என்றேன் சிரித்துக் கொண்டே.

“ஆம்” என்றார் கம்பிரமாக...

அந்த தோரணையை பார்க்கும் போது எனக்கு மிகவும் சந்தோசமாக இருந்தது. ஒரு மனம் தன் சந்தோசத்தை கண்டு பிடித்துவிட்டாலே அந்த வாழ்க்கை கொண் டாட்டமாக மாறிவிடும்.

குரு பேச தொடங்கினார்...

“மனஅமைதி, சந்தோசம் மற்றும் பணத்தை அடைய முடியும் என்ற நம்பிக்கை எல்லாம் சேர்ந்து என் வாழ்க் கையை பசுமையாக்கி விட்டது. அடுத்து நாம் எதை பற்றி பார்க்க போகிறோம்?” என்றார்.

“உண்மை! நாம் ஒன்றை உருவாக்குவது எவ்வளவு சிறப்போ அதை இறுதிவரை காப்பாற்றி கொண்டு செல் வது அதை விட சிறப்பானது” என்றதும்.

“அதற்க்கு நான் என்ன செய்ய வேண்டும்.” என்றார்

“தொடர்ந்து நீங்கள் இதையே செய்வதுதான். உருவாக்கும் போது நமக்கு இருக்கும் ஆர்வம் இறுதி வரை தொடர்வதில்லை. அதனால் தான் நிறைய மக்கள் பெரிய வெற்றிகள் பெற்ற பின்னரும் மீண்டும் பழைய நிலைக்கே திரும்புகின்றனர். இந்த நிலை நமக்கு வராமல் இருக்க நாம் எந்த உயரத்தை அடைந்தாலும் நம்மை நாமே சோதனை செய்வதை நிறுத்த கூடாது” என்றேன்

“புரிகிறது! அப்போது தான் நாம் திசை மாறாமல் பயணிக்க முடியும்!” என்றார்.

“சரியாக சொன்னீர்கள்! உருவாக்குவதை விட காப்பாற்றுவது எளிது தான். ஆனால் கவனமாக தொடர்ந்து செய்ய வேண்டும்.” என்றேன்.

“நிச்சயமாக செய்கிறேன்” என்றார்.

“சந்தோசம்! நான் உங்களை இன்னும் அதிக சந்தோசத்திற்கு எடுத்து செல்ல விரும்புகிறேன்” என்றதும்.

“எப்படி? நான் என்ன செய்ய வேண்டும்?” என்றார் ஆவலோடு.

“உங்களை சுற்றியுள்ள மனிதர்களை, ஒவ்வொரு பொருட்களையும் பாருங்கள்” என்றேன்.

“நீங்கள் கவனிக்க துவங்குங்கள்! பிறகு என்ன நடக்கிறது என்று பார்த்துவிட்டு என்னிடம் வந்து கூறுங்கள்” என்றேன்.

“வெறுமனே கவனித்தால் போதுமா?” என்றார்

“போதும்” என்றேன்.

“நிச்சயமாக செய்கிறேன்! அடுத்து நாம் எப்போது சந்திக்கலாம்?” என்றார்

“பத்து நாட்கள் கழித்து மீண்டும் சந்திப்போம். நம் சந்திப்பிற்கான நோக்கத்தின் இறுதி கட்டத்தை அடைந்து விட்டோம்.” என்றவுடன் சந்தோசமாக விடைபெற்று சென்றார்.

பணத்தை தாண்டி வாழ்க்கை அற்புதமாக இருக்கிறது என்பதை நாம் நம் வாழ்வில் ஒரு முறை உணர்வோமேயானால் உங்கள் வாழ்க்கை கொண்டாட்டமானதாக மாறிவிடும்.

அடுத்த சந்திப்பில் அவரை இன்னும் அதிக சந்தோசத்தோடு எதிர்பார்க்கிறேன். என்ன நடக்கிறது என்று பார்ப்போம். நீங்களும் என்னோடு காத்திருங்கள். அடுத்த அத்தியாயத்தில் தொடர்வோம்.[23]

அத்தியாயம் 7

# நன்றியுணர்வு

நம் சிந்தனைகள் தான் நம் வாழ்க்கையை உரு வாக்குகின்றன என்றாலும் அடுத்த நொடி என்ன நடக் கும் என்பது நமக்கு தெரியாது என்பதே உண்மை. ஆழமாக பார்த்தால் அதுதான் சுவாரஸ்யமே! இல் லையா?

அப்படியென்றாலும் நாம் நல்ல எண்ணங்களை உணர் வதன் மூலம் நாளை வரக்கூடிய சூழ்நிலைகளில் தாக் கத்தை ஏற்படுத்த முடியும்.

**இந்த நொடி நல்லதை உணர்ந்துவிட்டு அடுத்த நொடி என்ன நடந்தாலும் ஏற்றுக்கொள்ள தயாராய் இருக்கும்போது தான் பிரபஞ்சம் மாயாஜாலங்களை நிகழ்த்துகிறது.**

நம்மில் எத்தனை பேர் இதை போன்று திறந்த மன துடன் ஏற்றுக்கொள்ள தயாராக இருக்கிறோம் என்பது கேள்விக்குறியே!!

எதிர்காலம் என்பது நிகழ்காலத்தில் தான் தீர்மானிக்கப படுகிறது என்பதை நாம் மறந்தே போய்விட்டோம் என்று தான் தோன்றுகிறது. எதிர்காலம் சிறப்பாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்தில் நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிமிடமும் அயராது பாடுபட்டு கொண்டிருக்

கிறோம். இதனால் நிகழ்காலம் என்பது வீணடிக்கப் பட்டு கொண்டிருப்பதை நாம் உணர்வதில்லை.

நிகழ்காலம் முழுமையாக அனுபவிக்கபடவில்லை என் றால் எதிர்காலம் எப்போதும் சிறப்பாக இருக்க வாய்ப் பில்லை என்பதை நாம் உணர வேண்டும்.

இன்னும் ஆழமாக சொல்ல வேண்டுமென்றால் நம் வாழ்க்கை 90% நல்லபடியாக தான் நடந்துகொண்டு இருக்கிறது. 10% சிறிய தேவைகள் இருக்கின்றன என் பதை ஒப்புக்கொண்டாக வேண்டும்.

இந்த 10% பற்றாக்குறையை நாம் 100% கவனம் கொண் டதால் தான் நம் வாழ்க்கையே சபிக்கப்பட்டது போல தோன்றுகிறது. வெறுப்பும் விரக்தியும் நம் மனதை ஆட்டி படைக்கிறது.

இப்படி நம்மிடம் என்ன இல்லையோ அதை தேடியே வாழ்நாள் எல்லாம் கழிந்து போனால் இருக்கும் வாழ்க் கையை எப்போது அனுபவிப்பது.
நம்மிடம் இருக்கும் 90% நல்லதை எப்போது கொண்டா டுவது?

வாழ்க்கை கொண்டாட்டமாக தான் இருக்கிறது என் பதை உணர தேவையான விழிப்பு நம்மிடத்தில் வேண் டும். விழிப்பு உருவாக ஆரம்பித்தால் தான் நாம் நம் வாழ்க்கையை வாழவே ஆரம்பிக்கிறோம். இந்த விழிப்பு குருவிடம் நிகழ வேண்டி தான் இவ்வளவு தூர பயணம். குரு அதை அடையும் தருணமும் வந்துவிட் டது. அடைந்திருப்பாரா?

இந்த கேள்விக்கான விடையோடு தான் என்னை குரு சந்திப்பார் என்ற ஆவலோடு அவரை சந்திக்கும் நாளுக்காக காத்திருந்தேன்.

அந்த நாளும் வந்தது...

மாலை 6 மணி, குரு தன்னுடன் ஒருவரை அழைத்து வந்திருந்தார். அவருடைய பெயர் குமரன் என்றும் அவ ரும் ஈர்ப்பு விதியை பற்றி அறிந்துகொண்டு அதை பயன் படுத்த முயற்சிப்பதாகவும் சில சந்தேகங்களை தீர்க்க வேண்டி என்னிடம் அழைத்து வந்ததாகவும் என்னிடம் கூறி அவரை அறிமுகம் செய்தார்.

அவரை பார்க்க குருவை விட இளையவராக தெரிந் தார்.

“உங்களுக்கு இவர்” என்று தொடங்கியதுமே...

குரு “என் அண்ணனின் மகன்” என்று கூறினார்.

“நல்லது, என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என் றேன் குமரனிடம்.

“நான் சென்னையில் ஒரு தனியார் அலுவலகத்தில் பணி புரிகிறேன் புகைப்பட கலைஞராக” என்றார் கும ரன்.

“சந்தோசம். உங்களின் சந்தேகம் என்ன?” என்றேன் குமரனிடம்.

“முதலில் சித்தப்பாவிற்கான விஷயங்களை பேசி முடித் தவுடன் நான் கேட்டு கொள்கிறேன்” என்றார் குமரன் குருவை பார்த்துக்கொண்டே.

குரு அவரை கொஞ்சம் காரமாக பார்த்தார். அவர்கள் பார்வை பரிவர்த்தனையில் இருந்து...

குமரனின் சந்தேகங்களை தீர்க்கும் அளவுக்கு நான் தகுதியானவனா என்பதை அறிந்த பிறகு கேள்விகளை

கேட்கலாம் என்ற எண்ணம் குமரனுக்கு இருந்தது எனக்கு புரிந்தது.

"நல்லது ! நீங்கள் சொல்லுங்கள், எப்படி சென்றது இந்த 10 நாட்கள். நான் சொன்னதை முயற்சித்து பார்த்தீர் களா?" என்றேன் குருவிடம்.

"உண்மையை சொல்ல வேண்டுமென்றால் என் வாழ் வில் இவ்வளவு சந்தோசமாக நான் இருந்ததில்லை." என்றார் குரு உற்சாகமாக.

"மிக்க மகிழ்ச்சி! என்ன நடந்தது?" என்றேன்

"நீங்கள் என்னை சுற்றியுள்ள மனிதர்களையும், பொருட்களையும் கவனிக்க சொன்னீர்கள்" என்றார்

"ஆம்"

"முதல் நாள் எனக்கு எதுவும் பெரிதாக தோன் றவில்லை. ஆனால் மறுநாள் வேலைக்கு தயாராய் கொண்டிருந்த போது என் உடைகளை அணிந்து கொண்டிருந்தேன். அதை கவனிக்க தோன்றியது. அப் போது திடீரென்று ஒரு உணர்வு...

'இந்த ஆடை தான் இன்று என் மானம் காக்க போகிறது' என்ற உணர்வு....

சிறிய விஷயம் தான் என்றாலும், அது ஏற்பட்டவுடன் என்னை அறியாமல் ஒரு ஆனந்தம். 'நன்றி' என்று கூற தோன்றியது. கூறினேன் மனதார.

அதன் பிறகு அது எப்போது வாங்கியது என்று சிந்தித் தேன். அதை எங்கு வாங்கினேன் என்ற சிந்தனையும் வந்தது. அதற்கான பணத்தையும் நினைவு கூர்ந்தேன். சந்தோசமாக இருந்தது.

அதோடு நின்று விடவில்லை. இது இன்று என்னிடம் இருக்க இதன் பயணம் எங்கு தொடங்கியிருக்கும் என்ற கவனம் வந்தது.

நூல் உற்பத்தி செய்யும் ஆலையில் இருந்து அதற்காக உழைத்த மக்கள், அதை ஆடையாக மாற்றிய மக்க ளின் உழைப்பு. அதை நம்மிடம் கொண்டு வந்த கடை யும் அதை சார்ந்த மக்களும் என்று பட்டியல் நீண்டு கொண்டே போனது.

என்னை அறியாமல் என் கண்கள் கலங்கின. ஏனென் றால், நான் அணியும் ஒரு மேல் சட்டை எத்தனை மக் களின் உழைப்பு என்பதும், அதற்க்கு அது எடுத்துக் கொண்ட காலம் என்பதும் சாதாரண விஷயம் இல்லை.

அப்படிப்பட்ட ஒரு படைப்பு இந்த ஒரு சட்டை. ஆனால் இதை நான் ஒரு போதும் உணர்ந்ததில்லை. அதை மதித்ததும் இல்லை.

ஒரு சட்டை வாங்க வேண்டும் என்னும் போது நான் அந்த கடைக்காரரிடம் பேரம் பேசுவேன். எப்படியாவது விலையை குறைத்து வாங்கிட வேண்டும் என்று போரா டுவேன். வாங்கியும் விடுவேன். அதையே பெரிய சந்தோ சமாக கருதியிருக்கிறேன். ஆனால் இன்று அந்த செயல் களை எண்ணி பார்த்தால் குற்ற உணர்வு ஏற்படுகிறது.

பரவாயில்லை, இன்றாவது அதை உணர்ந்தோமே என்ற எண்ணம் மகிழ்வை தந்தது. இனி பேரம் என்பது என் வாழ்வில் இருக்காது என்று எண்ணினேன்.

நான் மிக சாதாரணம் என்று நினைக்கும் ஒவ்வொரு பொருள் கூட ஒரு பெரிய பயணத்தை முடித்து தான் என் கைகளில் வந்து சேர்கிறது என்பது புரிந்தது. இதை நிகழ்த்திய அணைத்து மக்களுக்கும் என் மனமார்ந்த

நன்றிகள் என்று உரக்க சொன்னேன் என்னை அறியா மல்" என்று கூறி நெகிழ்ந்து போனார்.

"அற்புதம்! இதற்காக தான் உங்களை சுற்றி உள்ளதை நீங்கள் பார்க்க வேண்டும் என்று நான் எண்ணினேன்" என்றேன்

"நீங்கள் சொல்லும்போது அதன் அர்த்தம் எனக்கு புரி யவில்லை. ஆனால் அன்று அதை உணர்ந்தபோது வாழ்க்கை ஆசிர்வதிக்கப்பட்டது தான் என்று தோன்றி யது" என்றார்

"நம்முடைய வாழ்க்கை ஒவ்வொரு நொடியும் சிறப்பாக நடக்க நிறைய மக்களின் பங்களிப்பு தேவை. நம் வாழ்க் கையும் அவர்களால் தான் மிக இலகுவாக செல்கிறது. அவர்களின் துணையின்றி நாம் எதுவும் செய்ய இய லாது.

நாம் எல்லாரும் ஒன்று சேர்ந்து ஒருவர்க்கு ஒருவர் உதவி செய்து ஒற்றுமையாக தான் வாழ்ந்து வருகிறோம். இல்லையென்றால் இந்த உலகம் இவ்வளவு இலகு வாக, அழகாக நடக்க வாய்ப்பில்லை.

ஆனால் நம் ஒவ்வொருவர் மனதிலும் அதை பற்றிய எந்த தெளிவும் இல்லை. தனியாக இருப்பதாகவும், பெரும்பாலானோர் மோசமானவர்கள் என்றும் சுயநல வாதிகள் என்றும் முத்திரையிட்டு தனித்தனி தீவுகளாகி விட்டோம். நம் ஒற்றுமையை நாம் உணர்வோமானால் நாம் இன்னும் ஆழமான சந்தோசத்தை அனுபவிக்க லாம்."

"உண்மைதான்! நீங்கள் சொல்வதை என்னால் உணர முடிகிறது. நன்றி" என்றார்.

அப்போது குமரன் குறுக்கிட்டு "எனக்கு ஒரு சந்தேகம் ?" என்றார்

"கேளுங்கள்" என்றேன்.

"சித்தப்பா கூறியது என்னை சிந்திக்க வைக்கிறது. இந்த உண்மையை நானும் ஒருபோதும் உணர்ந்ததில்லை. நம்மை சுற்றி நிறைய நல்ல விஷயங்கள் இருக்கின்றன என்பது புரிகிறது. ஆனால்" என்று இழுத்தார்.

"தயங்காமல் கேளுங்கள்" என்றேன்.

"நான் நன்றி கூறும் அளவிற்கு மக்கள் நியாயமாக இருப் பார்களா என்ற சந்தேகம் தான்!

அவர்கள் என்னை ஏமாற்றவும் கூடும் இல்லையா?

அதை சிந்திக்கும்போது எப்படி நன்றியுணர்வு வரும்?!" என்றார்

"நீங்கள் யாரையாவது ஏமாற்றி இருக்கிறீர்களா?" என்று கேட்டதற்கு.

"இல்லை, ஆனால் நிறைய பேர் என்னை ஏமாற்றி இருக்கிறார்கள்" என்றார் சோகமாக.

"நீங்கள் யாரையும் ஏமாற்றவில்லை சரி, ஆனால் யாரோ ஒருவர் நீங்கள் ஏமாற்றியதாக குற்றம் சுமத்தியுள்ளார் களா?" என்று கேட்டேன்.

"ஆம், நிறைய முறை. என்னுடன் வேலை செய்பவர்க ளும், என் மேலாளர் கூட பலமுறை ஏதோ ஒரு காரணத் திற்காக என் மீது பழி சுமத்துவார்கள்" என்றார்

"அப்படியென்றால், தவறே நீங்கள் செய்யவில்லை. அப் படித்தானே?!"

“அப்படி சொல்லிவிட முடியாது. என்னை அறியாமல் சில நேரங்களில் தவறு செய்திருப்பேன். ஆனால் சிறு தவ றுக்கு முழு பழியும் என் மீது விழுந்து விடும்” என்றார்.

“சரி! இன்றிலிருந்து உங்களுக்கு ஒரு புது மேலாளர் வருகிறார் என்று வைத்துக்கொள்வோம்” என்றேன்

“சரி” என்றார்.

“நீங்கள் அவருக்காக செய்து கொடுக்கும் ஒவ்வொரு வேலைக்கும் பாராட்டுவதோடு, நன்றியும் கூறுகிறார் என்றால் உங்களுக்கு என்ன தோன்றும்” என்றேன்.

“மிக மிக ஆனந்தமாக இருக்கும்! அவருக்காக நான் எந் தளவு வேண்டுமென்றாலும் உழைக்க தயாராய் இருப் பேன்” என்றார்

“நேர்மையாக இருப்பீர்கள் தானே?” என்றதற்கு

“நிச்சயமாக” என்றார்.

“அப்படியென்றால் இப்போது இருக்கும் மேலாளருக்கு நீங்கள் நேர்மையாக இல்லை. அப்படித்தானே” என் றேன்.

“அப்படி இல்லை! ஆனால் எதாவது வாய்ப்பு கிடைக்கு மெனில் செய்தால் தவறில்லை என்று தோன்றியிருக்கி றது. மனதார என் வேலையை செய்ய வேண்டும் என்ற எண்ணம் எப்போதும் தோன்றியதில்லை.” என்றார்.

“அதாவது, ஏமாற்றுவதையும் நீங்கள் சரி தான் என்று எண்ணம் கொள்ளும் அளவுக்கு விஷயங்கள் நடந்தி ருக்கின்றன. இல்லையா?” என்றதற்கு.

“ஆமாம்” என்றார்.

“அப்படியிருக்க புது மேலாரிடம் மட்டும் இந்த புதிய விசுவாசம் வரும் என்று எப்படி நம்புகிறீர்கள்?” என்றேன்

“அவர் என்னிடம் நல்லபடியாக நடந்துகொள்ளும்போது நான் சரியாக நடந்துகொள்வதில் எனக்கு எந்த சிரமும் இல்லை’ என்றார்.

“அந்த புதிய மேலாளர் உங்களை போல அலுவலகத்தில் உள்ள அனைவருடனும் நல்லபடியாக நடந்துகொள்ளும் போது அனைவரும் செயல்களை முழுமையாக செய்ய விரும்பலாம் உங்களை போல! இல்லையா?” என்றதற்கு

“நிச்சயமாக! வாய்ப்பிருக்கிறது” என்றார்

“ஒருவர் தனக்கு நடக்கும் ஒவ்வொரு விஷயத்திற்கும் நன்றியுடையவராக இருக்கும்போது அவரை சுற்றி உள்ளவர்கள் மீது அவர் மாபெரும் தாக்கத்தை ஏற்படுத்துகிறார் என்பது தானே உண்மை” என்றேன்

“ஆம், உண்மை தான்” என்றார்.

“நல்லது! இதை ஏன் நீங்கள் முதலில் துவங்க கூடாது?” என்றதற்கு

மௌனம் மட்டுமே பதிலாக வந்தது. நான் தொடர்ந்தேன்…

“மாற்றத்தை நாம் எப்போதுமே வெளியில் இருந்து எதிர்பார்ப்பத்திற்கு பதிலாக, நாமே அந்த மாற்றமாக இருந்தால் நமக்கும் நல்ல பலன் கிடைக்கும். மற்றவர்களும் நன்மை அடைவார்கள்” என்றதற்கு

“உண்மைதான்” என்றார் குமரன்.

“அதைத்தான் உங்கள் சித்தப்பா செய்கிறார். அவருக்கு ரிய விஷயங்களுக்கு அவர் நன்றியோடு இருக்கும்போது அவரை அறியாமல் அவர் மற்றவர்களில் மேலும் ஒரு நல்ல தாக்கத்தை ஏற்படுத்தி நன்மையை விதைக்கி றார்” என்றவுடன்.

குமரன் தன் சித்தப்பாவான குருவை பார்க்கிறார். அவர் பார்வையிலேயே அவர் மனதில் குரு உயர்ந்த இடத் திற்கு வருகிறார் என்பது புரிந்தது.

குருவின் முகத்திலும் அப்படியொரு சந்தோசம். புன்ன கைத்துக்கொண்டே என்னை பார்த்து...

‘என் செயல்கள் எனக்கே பெருமை தருவதை இப் போதுதான் முதன்முறையாக உணர்கிறேன்” என்றார் உணர்ச்சி பொங்க!

“நன்றியுணர்வு என்பது நம்மை மட்டும் அன்றி நம்மை சார்ந்தவர்களையும் மாற்றும் வல்லமை கொண்டது.” என்றவுடன்.

“உண்மைதான்” என்று இருவரும் சேர்ந்து கூறினார்கள்.

“இதுபோல வேறு விஷயங்களிலும் நீங்கள் நன்றியை உணர்ந்தீர்களா?” என்று குருவிடம் மறுபடியும் கேட் டேன்.

“ஆம்! நிறைய, என்னை சுற்றியுள்ள பொருட்களின் மீதும், மக்களின் மீதும் என் கவனம் அதிகமானது. நான் நன்றியோடு இருக்க வேண்டிய பல விஷயங்களை கண் டுபிடித்தேன்” என்றார்.

“அருமை! இதற்க்கு முன் உங்களால் ஏன் இதை உணர முடியவில்லை?” என்று கேட்டதற்கு

“இதையெல்லாம் கவனிக்க எங்கே எனக்கு நேரம் இருந்தது. எப்போதும் பணம் சம்பாதிப்பது பற்றியும், என் சூழ்நிலைகளை பற்றியுமே சிந்தித்து கொண்டிருந்தேன். “ என்றார்

“சரி தான்! இப்பொழுது எப்படி உங்களால் சிந்திக்க முடிந்தது!!” என்றதற்கு

“இப்பொழுது எனக்கு நம்பிக்கை வந்துவிட்டது. அத னால் அந்த சிந்தனைகள் என்னிடம் இருந்து விலகி விட்டன. மனம் அமைதியானதால் என்னால் இதை கவ னிக்க முடிந்தது என்று எண்ணுகிறேன்” என்றார்.

“உங்கள் சூழ்நிலைகள் சரியானதால் உங்கள் சிந்தனை தெளிவடைந்து அமைதி அடைந்தீர்களா?” என்றதற்கு.

“முழுமையாக இல்லை, ஆனால் முப்பது சதவீதம் நல்ல மாற்றம் இருக்கிறது. அதோடு ‘இனி சந்தோசமாக வாழ முடியும்’ என்ற நம்பிக்கை உறுதியாக இருக்கிறது” என் றார்

“சரி! அன்றும் நீங்கள் நன்றி சொல்ல கூடிய விஷயங் கள் இருந்தது! ஆனால் நம்மால் அதை உணர முடிய வில்லை.

காரணம் …

எப்போதும் கடந்த காலத்தையோ அல்லது எதிர்காலத் தையோ பற்றிய சிந்தனை ஓடிக்கொண்டே இருந்தது தான்.

நாம் வெறுமனே நம் சிந்தனைகளை குறைத்திருந் தாலே, நாம் எப்படிப்பட்ட வாழ்க்கையை வாழ்கிறோம் என்பது புரிந்திருக்கும். எதிர்மறை சிந்தனை இருந்தா

லும் நம்மால் இதை உணர முடியும். ஏனென்றால் அது உண்மை." என்றேன்.

"உண்மைதான்! அப்படியென்றால் நாம் எப்போதும் நிகழ்காலத்தில் இருக்க வேண்டும். இல்லையா?" என் றார்.

"நாம் எப்போதும் நிகழ்காலத்தில் தான் இருக்கிறோம் என்பதை நாம் உணரவேண்டும் என்கிறேன்.

முடிந்ததையும் அல்லது நடக்கபோவதையும் நாம் நிகழ் காலத்தில் இருந்து தான் சிந்திக்க முடியுமே தவிர, கடந்த காலத்திற்கு நாம் திரும்பவும் முடியாது எதிர்கா லத்திற்கு போகவும் முடியாது. இயற்கையை பொறுத்த வரை நிகழ்காலம் மட்டுமே நிதர்சனம்" என்றேன்[24]

"அப்படியென்றால் நாம் நம் சுயநினைவை இழக்கிறோம் என்பது போல் தோன்றுகிறது" என்றார்

"அதுதான் உண்மை! நிகழ்காலத்தில் நாம் சிந்தனை களில் மூழ்கி இருப்பதால் சுயநினைவை இழக்கிறோம். நம் கவனம் முழுக்க சிந்தனையில் இருக்க, மனம் மற்ற செயல்களை ஏனோ தானோ என்று செய்து முடிக்கிறது. அன்னிச்சை செயல்கள் போல...

பல நேரங்களில் செயல்களை நாம் தான் செய்தோமா என்ற அளவிற்கு நாம் சிந்தனைகளில் மூழ்கி கிடக்கி றோம். அந்த தருணங்கள் எல்லாம் வாழ்க்கையை பற்றி சிந்திக்கிறோமே தவிர நாம் வாழவில்லை அதாவது வாழ்வை அனுபவிக்கவில்லை" என்றேன்

"நம்மை சுற்றி நிறைய நல்ல விஷயங்களும், நல்ல மனி தர்கள் இருப்பதையும் நான் இப்பொழுது பார்க்கிறேன். தூக்கத்தில் இருந்து விழித்தது போல் இருக்கிறது" என் றார்

"உண்மையே! இதுவும் ஒரு வகை தூக்கம் தான். அதிக சிந்தனைகளால் நம் வாழ்க்கை வீணடிக்கப்படுகிறது. வாழ்வதற்கு சிந்தனைகள் வேண்டும். ஆனால் சிந்தனையே இங்கு வாழ்க்கையாகிவிட்டது பலருக்கு." என்றேன்

---

ஒரு காலத்தில் நானும் அப்படித்தான்! சிந்தனையில் சிக்கிகொள்வதும் பிறகு முயற்சித்து மீள்வதும் மனித குலத்திற்கு ஒன்றும் புதிதல்ல

---

"இன்னும் விழிப்பாக இருக்க என்ன செய்யலாம் என்று கூறுங்கள் அதை நான் செய்து முழுமையாக விழிப்படைய விரும்புகின்றேன்" என்றார் குரு.

"நீங்கள் எந்த செயல் செய்தாலும் முழுமையான ஈடுபாடு கொண்டு செய்யுங்கள். முழுமையாக உங்களை அதில் அர்ப்பணிக்க முயற்சியுங்கள். உங்களை சுற்றியுள்ள நல்ல விஷயங்களை கண்டுபிடிக்க முயற்சி செய்யுங்கள்." என்றேன்.

"இதனால் சிந்தனைகள் குறையுமா? " என்றார்.

"நிச்சயமாக, தேவையில்லாத அனைத்து சிந்தனைகளும் குறையும். ஏனென்றால், நீங்கள் முழுமையான ஈடுபாடு கொண்டு செயல் செய்வதினால் அந்த செயலை பற்றி மட்டுமே மனம் சிந்திக்கும். ஒன்றை பற்றி மட்டும் சிந்திக்கும் போது தெளிவும் இருக்கும். இதனால் நாம் என்ன செய்கிறோம் என்பதை உணர்ந்து செய்ய முடியும்.

அந்த செயலுக்கு உதவுகின்ற பொருட்களையும் மக்களையும் பார்க்க முடியும். அவர்களின் பங்களிப்பை உணர முடியும். நன்றி செலுத்த முடியும். இதனால் சந்தோசம் இன்னும் அதிகரிக்கும்

இந்த கவனத்தாலும், நல்ல உணர்வுகளாலும் உங்கள் செயல்கள் மேலும் சிறப்படையும். உங்களுக்கு பெருமையையும் தேடி தரும்." என்றேன்.

"நிச்சயமாக நான் இதை செய்கிறேன். நன்றியுணர்வு தான் என்னை எண்ணி பெருமைப்பட வைத்திருக்கிறது. தொடர்ந்து செய்வேன்" என்றார் சந்தோசமாக.

குருவுடனான இந்த சந்திப்பு அருமையாக இருந்தது. அவருக்கு மேலும் ஒரு தெளிவு கிடைத்ததை என்னால் பார்க்க முடிந்தது.

ஆனால் இந்த சந்திப்பு முடியவில்லை மேலும் தொடர்ந்தது. குமரனின் கேள்விகளோடு...

குமரனின் கேள்விகள் பற்றி அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.[25]

அத்தியாயம் 8

# தடைகளை உடைப்போம்!

நன்றியுணர்வின் ஆழத்தை உணர்ந்து கொண்ட குரு ஆனந்த களிப்பில் இருந்தார். இனி அவர் வாழ்க்கையை பற்றிய கவலை அவருக்கு வர போவ தில்லை. ஏனெனில் நம்மிடம் இருப்பதை பார்ப்பவ ருக்கு எதிர்கால கவலை வருவதற்கு வாய்ப்பில்லை.

குருவின் அண்ணன் மகனான குமரன் தன்னுள் இருக் கும் சந்தேகங்களை தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று இங்கே வந்திருந்தாலும், என் மீதான நம்பிக்கை அவ ருக்கு தேவைப்பட்டது. அப்போதுதான் அவரால் நான் சொல்லும் விஷயங்களை நம்ப முடியும். இந்த தயக்கத் தால் தான் குமரன் இறுதியாக கேள்விகளை கேட்டு கொள்கிறேன் என்று கூறினார்.

இவ்வளவு நேரத்திற்கு பின்னும் குமரனிடம் அந்த நம் பிக்கை சிறிதளவே வந்துள்ளதாக தெரிகிறது. நியா யமானது தான் என்றாலும் நம்முடைய கேள்விகளுக்கு யாரை வேண்டுமென்றாலும் கருவியாக பயன்படுத்தி பிரபஞ்சம் பதிலை தரும் என்பதை குமரன் அறிந்திருக் கவில்லை என்பது புரிந்தது.

---

*உங்கள் மனதில் தோன்றும் கேள்விகளை எதிரில் இருப்பவரிடம் தயங்காமல் கேளுங்கள். ஏனென்றால் , நீங்கள் கேட்பது அந்த மனிதரிடம் அல்ல பிரபஞ்சத்தி டம் என்பதை நினைவில் கொள்ளுங்கள்!*[26]

----

அப்போது குரு குமரனிடம் உன்னுடைய கேள்விகளை கேள் என்று அதட்டினார்.

குமரன் ஆரம்பித்தார்…

“ஈர்ப்பு விதியை பற்றியும் அதன் சக்தி பற்றியும் அதனால் நன்மை அடைந்த மக்களை பற்றியும் நான் இணையத் தில் நிறைய படித்திருக்கிறேன், காணொளிகளும் பார்த் திருக்கிறேன்” என்றார்

“சரி” என்றேன்

“அதை படிக்க படிக்க மனதிற்குள் ஒரு உத்வேகம், எப்ப டியாவது இதை நானும் பயன்படுத்தி எனக்கு தேவையா னதை எல்லாம் உருவாக்கி நானும் அவர்களை போல ஆக வேண்டும் என்று” என்றார் குமரன்

[27]“சரி, முயற்சித்தீர்களா?” என்றேன்

“ஆம், நிறைய பயிற்சிகளை முயற்சித்தேன். ஆனால் எதுவும் எனக்கு போதுமான பலனை அளிக்கவில்லை. இறுதியில் இது நமக்கு சரியாக இருக்காதோ என்ற சந் தேகமும், கவலையும் வந்துவிட்டது” என்றார் சோகமாக.

“பரவாயில்லை! இந்த பயணத்தில் தடுமாறுவதும், பயம் கொள்வதும், சந்தேகப்படுவதும் இயல்பான ஒன்று தான். எல்லோரும் இதை தாண்டி தான் சென்றாக

வேண்டும். ஆனால் அதற்காக பயணத்தை கைவிடுவது என்பது சரியான முடிவாக தோன்றவில்லை" என்றேன்

"அப்படியில்லை! நான் சாதாரணமாக இந்த எண்ணத் திற்கு வரவில்லை. நான் எவ்வளவு முயற்சிகள் செய் திருக்கிறேன் என்பது தங்களுக்கு தெரியாது." என்றார் விரக்தியாக.

குமரனின் மனநிலை எனக்கு தெளிவாக தெரிந்தது. ஆனாலும் அதை நான் நேரடியாக சொல்ல விரும்ப வில்லை. ஏனெனில், அதை ஏற்றுக்கொள்ளும் மனநி லையில் தற்போது அவர் இல்லை. அதனால் நான் அவ ரிடம் சில கேள்விகளை கேட்டு அதன் மூலம் அவரை மீண்டும் முயற்சிக்க வைக்க முடிவு செய்தேன்.

"எவ்வளவு காலமாக நீங்கள் இதை முயற்சிக்கிறீர்கள்?" என்றதற்கு

"இரண்டு வருடமாக" என்றார்

"சரி, ஈர்ப்பு விதி என்றால் என்ன? அது எப்படி செயல்படு கிறது என்பதை உங்களால் கூற இயலுமா?" என்றேன்.

"உங்களுக்கு தெரியாதா? " என்றார்

"உங்களுக்கு என்ன தெரிந்திருக்கிறது என்று எனக்கு தெரிந்தால் தான் நான் உங்கள் கேள்விகளுக்கு விளக் கம் தர முடியும்" என்றேன்.

"சரி, ஈர்ப்பு விதி மூலம் நமக்கு தேவையானதை நம் உணர்வுகளின் மூலம் உருவாக்கிகொள்ள முடியும். நமக்கு என்ன தேவையோ அது இருப்பது போல் நாம் உணர்ந்தால் அது உருவாகும்" என்றார்.

"இன்னும் கொஞ்சம் விளக்கமாக" என்றேன்.

"நம் எண்ணங்களை மற்றும் உணர்வுகளை சீர் செய் வதன் மூலம் நமக்கு தேவையான ஒரு வாழ்க்கையை வாழ முடியும். அதை கொண்டு நாம் எதை வேண்டு மென்றாலும் உருவாக்க முடியும்." என்றார்.

"இது இயற்கையான விதிதானே?" என்றதற்கு

"ஆம்!" என்றார்

"எப்போதெல்லாம் இது இயங்கும்?" என்றதற்கு

"எப்போதும் இயங்கிக்கொண்டே இருக்கும்" என்றார்.

"அது உங்களுக்கு எப்படி தெரியும்?" என்றதற்கு

"படித்திருக்கிறேன்! இதில் வெற்றி பெற்றவர்களும் இதை தான் கூறுகிறார்கள்" எனறார்

"உங்கள் அனுபவத்தில் இருக்கிறதா?" என்றதற்கு

"அவர்கள் சொல்வது பொய் என்கிறீர்களா?" என்றார் பதிலுக்கு.

"நான் அவர்கள் சொல்வதை பொய் என்று சொல்ல வில்லை, அது உண்மை என்ற அனுபவம் உங்களுக்கு இருக்கிறதா என்று தான் கேட்கிறேன்" என்றேன்

மௌனமானார்.

"அவர்கள் சொன்னதை நம்பி நீங்கள் உங்கள் முயற் சியை துவங்கியது தவறில்லை. உண்மைகள் ஆனாலும் பல நேரங்களில் அது முதலில் மற்றவர்கள் மூலமாக தான் நம்மை தொடும்.

ஆனால் அது அடிப்படையாக அமையுமே தவிர முழு மையான மாற்றத்தை, புரிதலை தந்து விடாது. அது

என்ன என்ற புரிதலை அடையும் முன் உங்கள் வாழ்க் கையை உருவாக்க தொடங்கியது தான் உங்கள் விரக் திக்கு காரணம் என்கிறேன்" என்றேன்

"இதற்க்கு மேல் இதில் புரிந்துகொள்ள என்ன இருக்கி றது?" என்றார் மறுபடியும்.

"ஒரு தகவலுக்கும், உண்மைக்கும் உங்களுக்கு வேறு பாடு தெரியவில்லை என்பதுதான் பிரச்சனை" என் றேன்

"என்ன வேறுபாடு? புரியவில்லை!" என்றார்

"ஒரு தகவல் உங்களிடம் வரும்போது அது உங்களை ஆச்சரியப்படுத்தும், உத்வேகத்துடன் சில முயற்சிக ளையும் மேற்கொள்ள வைக்கலாம்" என்றேன்

"சரி" என்றார்

"ஒரு உண்மை உங்களை தொடும்போது நீங்கள் அமைதி அடைவீர்கள். நிம்மதியை உணர்வீர்கள். அந்த உண்மையை உணர்ந்து செயல்பட துவங்கிவிடுவீர்கள் எந்த முயற்சியும் இல்லாமல். எந்த ஆர்ப்பாட்டமும் இல் லாமல் உங்களுக்குள் மாற்றம் நிகழ்ந்திருக்கும்" என் றேன்.

மௌனமாக என்னையே பார்த்தார் குமரன்.

"உங்களுக்குள் என்ன நிகழ்ந்தது என்று இப்பொழுது சொல்லுங்கள்" என்றேன்

"இன்னும் எப்படியாவது இதை பயன்படுத்த வேண் டும் என்ற ஆராவாரம் தான் இருக்கிறது. அதை பற் றிய உண்மை என்னவென்று புரியவில்லை என்று தான் தோன்றுகிறது" என்றார்

"இதை உடனே உங்களால் ஏற்றுக்கொள்ள முடிவதை பார்க்கும்போது, நீங்கள் ஏற்கனவே வேறு உண்மை களை உணர்ந்திருக்க வேண்டும்" என்றதற்கு

"உண்மைதான்! என்னுடைய தொழிலை தேர்ந்தெடுக் கும்போது எனக்கு எதில் உண்மையிலேயே ஆர்வமும், திறமையும் இருக்கிறது என்பதை உணர்ந்த போது நிம் மதி அடைந்தேன். அதையே என் தொழிலாக தேர்ந்தெ டுப்பதும் அதில் பயணிப்பதும் எனக்கு எளிதாக தான் இருந்தது.

ஆனால் என் நண்பர்கள் சிலர் இதை பெரிதாக பேசுவ துண்டு 'உனக்கு பிடித்த வேலையை செய்கிறாய்' என்று.

எனக்கு அப்படி ஒருபோதும் பெரிதாக தோன்றிய தில்லை." என்றார் குமரன்.

"ஆனால் ஈர்ப்பு விதி என்பது உங்களுக்கு இன்னும் பெரிதாக தானே தோன்றுகிறது?" என்றதற்கு

"ஆம்" என்றார்.

"அப்படியென்றால்?" என்றேன்

"அதை பற்றிய எந்த புரிதலும் எனக்கில்லை என்பது தான் உண்மை" என்றார்

"நல்லது, அப்படியிருக்க இது நமக்கு வேலை செய்யாது என்ற முடிவுக்கு ஏன் வந்தீர்கள்" என்றேன்

"தெரியவில்லை! எப்படி செய்தால் சரியாக இருக்கும் என்ற தடுமாற்றம், குழப்பம் கூட காரணமாய் இருக்க லாம்" என்றார்

"சரி, பரவாயில்லை! எந்த ஒரு பயணத்திலும் தடுமாற் றம் என்பது இயல்பானது. இன்னும் சொல்ல வேண்டு

மென்றால் நாம் மேலும் தெளிவை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே அவை வருகின்றன" என் றேன்

"இப்போது புரிகிறது" என்றார்

"மீண்டும் முயற்சிப்பீர்களா?" என்றதற்கு

"நிச்சயமாக" என்றார் உறுதியோடு.

"வாழ்த்துக்கள்" என்றேன்

"இதை புரிந்துகொள்ள நான் எங்கிருந்து தொடங்க வேண்டும் என்பதை கொஞ்சம் சொல்லுங்கள்" என்றார் குமரன்.

"உங்கள் அன்றாட செயல்பாடுகளில் இருந்து ஆரம்பி யுங்கள். சிறிய விஷயங்களில் நல்ல உணர்வை வெளிப் படுத்தி பாருங்கள். அது எளிதாகவும் இருக்கும் அதே நேரம் ஈர்ப்பு விதியை பற்றி புரிந்துகொள்ளவும் உதவி யாக இருக்கும்" என்றேன்

"அப்படியே செய்கிறேன்" என்றார்

"இதிலும் குழப்பம் ஏற்படலாம், தடுமாறலாம் ஆனாலும் முயற்சியை கைவிடாதீர்கள்" என்றேன்

"நிச்சயமாக முயற்சியை கைவிட மாட்டேன்! நான் எதை தேடுகிறேனோ அதை அடையும் வரை தொடர்ந்து பய ணிப்பேன்" என்றார் தீர்க்கமாக. கேட்பதற்கு ஆனந்த மாக இருந்தது. அவரது முயற்சிக்கு பிரபஞ்சம் துணை யாக இருக்கட்டும்.

அப்போது குரு...

“அப்படியென்றால் எது ஒன்றாயினும் அதை என்ன வென்று நாம் முழுமையாக புரிந்துகொள்ளாமல் அதை பயன்படுத்த துவங்குவது தவறு! இல்லையா?” என்றார்.

“அப்படியில்லை! நீங்கள் பயன்படுத்த துவங்கவில்லை என்றால் அதை உங்களால் புரிந்துகொள்ள முடியாது” என்றேன்.

“எனக்கு ஒன்றும் விளங்கவில்லை! புரிந்துகொண்ட பிறகு பயன்படுத்துங்கள் என்கிறீர்கள்! இப்பொழுது முத லிலே பயன்படுத்த துவங்குங்கள் என்கிறீர்கள்” என்றார் குழப்பமாக

“நான் உங்களுக்கு புரியும்படியே சொல்கிறேன்,
நீங்கள் என்னிடம் முதன் முதலில் வந்தபோது என்ன செய்ய சொன்னேன்?” என்றேன்

“எனக்கு தேவையான விஷயங்களை பற்றி சிந்திக்க சொன்னீர்கள்” என்றார் குரு

“சரி! ஆனால் நான் சொன்னதற்காக அதை வெறுமனே செய்தீர்கள். அதன் பலனை எதிர்பார்த்து இல்லை. சரி தானே!” என்றேன்

“ஆமாம்” என்றார்

“ஒருவேளை நீங்கள் அதை செய்யவில்லை என்றால் அதை சார்ந்த அனுபவம் கிடைத்திருக்குமா?” என் றேன்

“இல்லை” என்றார்

“அவ்வளவுதான்! கற்றுக்கொள்வதற்காக பயன்படுத்தி கற்றுக்கொண்ட பிறகு வாழ்க்கையை உருவாக்க பயன் படுத்த வேண்டும்

இன்னும் சுலபமாக சொன்னால்...

ஒரு கருவியை நாம் வாங்கினால் முதலில் அது எப் படி இருக்கிறது என்று பார்க்கிறோம், அது எதற்கு உத வும் என்ற தெளிவை பெறுகிறோம் அதன் பிறகு அதை பயன்படுத்த துவங்குகிறோம்.
அப்படியும் புரியாதபோது சிலமுறை பயன்படுத்தி பார்த்து அதன் விஷயங்களை புரிந்துகொள்கிறோம்.

இது இப்படி செய்யவேண்டும் என்பது எல்லாருக்கும் தெரியும் ஒன்று தான். ஆனால் ஈர்ப்பு விதியில், மனதை பற்றிய விஷயங்களில் மட்டும் இதை இப்படி பயன்படுத்த யாரும் முயற்சிப்பதில்லை.

நேரடியாக வேண்டியதை உருவாக்க முயற்சிப்பதால் ஏற்படும் குழப்பங்களும், தடுமாற்றங்களும் அவர்களை நிலை குலைய செய்து அந்த முயற்சிகளை கைவிடும் படி செய்து விடுகிறது.

நம் குமரனுக்கும் அது தான் நடந்தது" என்றேன்

ஆம் என்று தலையசைத்தார் குமரன். குருவும் "இப்பொ ழுது புரிந்துகொண்டேன்" என்றார்

"புதியதாய் ஒன்றை கற்றுக்கொள்ளும் போது தடுமாற்றம் இயல்பானது என்பது நம் எல்லாருக்கும் தெரியும் என் றாலும் அது நிகழும்போது நிலைகுலைந்து போக கார ணம் நாம் அதை அனுபவமாக உணரவில்லை என்ப தால் தான்.

வெற்றியோ, தோல்வியோ, லாபமோ, நஷ்டமோ அனுப வம் என்பது சிறந்த செல்வம். அது எப்போதும் பெருகிக் கொண்டே தான் இருக்கும்.

தடுமாற்றங்களை கண்டு கவலை கொள்ளமல் அது எதனால் நிகழ்ந்தது என்பதை பார்த்தால் அதிலிருந்து நாம் ஒன்றை கற்றுக்கொள்ள முடியும். அது நம் இலக்கு களை அடைய இன்னும் சுலபமான வழிகளை காட்டும்" என்றேன்

"தடுமாற்றங்களை கண்டு பயம் கொள்வதற்கும், அதை எண்ணி புலம்புவதற்கும் என்ன காரணம் என்று எண் ணுகிறீர்கள்?

அதை எப்படி இயல்பாக பார்க்க கற்றுகொள்ளவது என் பதை விளக்க முடியுமா?" என்றார் குமரன்.

"நிச்சயமாக!

நம் மனதில் எப்போதும் ஒரு எண்ணம் ஆழமாக இருக் கும். என்னவென்றால்...

எப்போதும் , எதுவானாலும் எல்லாமே நான்
நினைத்தபடி மட்டுமே நடக்க வேண்டும்

என்பதுதான் அது! இந்த எண்ணமானது நம் வாழ்வில் நாம் நினைத்ததை தவிர்த்து எது ஒன்று நிகழ்ந்தாலும் அது நம் நன்மைக்கே என்றாலும் கூட அதை பிரச்சனை யாகவே பார்க்கும்.

அதை ஏற்றுக்கொள்ள முடியாமல் பரிதவிக்கும். புலம் பும், சில நேரங்களில் தவறான முடிவுகளையும் எடுத்து விடும்" என்றேன்

"எனக்குள் இது ஆழமாக இருக்கிறது, எந்த ஒரு செயலை செய்ய வேண்டும் என்று சிந்திக்கும்போதே அது எனக்கு சாதகமாக மட்டுமே நடக்க வேண்டும் என்ற பதற்றம் வந்து விடும்.

இதனால் நான் நிறைய துன்பங்களை அனுபவித்து விட்டேன். எந்த ஒரு செயலையும் நிம்மதியாக, சந்தோசமாக செய்தோம் என்ற திருப்தியே ஏற்பட்டதில்லை. எனக்கு பிடித்ததை செய்யும்போது கூட இந்த பிரச்சனை வருகிறது.

ஆனால் அதற்கான காரணம் இப்போது தான் புரிகிறது. இதிலிருந்து வெளியில் வர ஒரு வழியை தயவு செய்து கூறுங்கள்" என்றார் குமரன்.

"அடுத்த நிமிடம் என்ன நிகழும் என்பது தெரியாது என்ற சுவாரசியம் தான் வாழ்க்கையின் உற்சாகமே! ஆனால் நமக்கு எப்போதும் நாம் நினைத்தது மட்டுமே ஒவ்வொரு நொடியும் நடக்க வேண்டும் என்ற எண்ணம் நம்மை ஆட்டி படைக்கிறது இல்லையா?" என்றேன்

"ஆம்! அப்படியென்றால் நமக்கு தேவையானதை பற்றி சிந்திக்க கூடாதா? ஆனால் அதை எப்படி செய்வது என்று தானே நாம் இதுவரை பேசினோம்" என்றார் குழப்பத்தோடு குரு.

"உண்மைதான்! நமக்கு என்ன வேண்டும் என்ற தெளிவை அடைந்தால் தான் நாம் போகும் பாதை சரியானதாக அமையும்! அதற்காக தான் நமக்கு என்ன வேண்டும் அது எப்படி நிகழ வேண்டும் என்பதையும் கவனிக்கிறோம்.

ஆனால் இந்த எண்ணமானாது நம்மை ஒவ்வொரு நொடியும் விளைவை பற்றி சிந்தித்துக்கொண்டு செயலை செய்யும்படியான ஒரு மனநிலைக்குள் தள்ளி விட வாய்ப்பிருக்கிறது.

**உங்கள் இலக்குகளை சிந்திக்க தனியாக நேரம் ஒதுக்கி சிந்தியுங்கள். அதற்கான செயலை செய்யும்**

**போது செயலின் மீதே கவனம் வேண்டும். இலக்கு கள் மீதல்ல!!**

அப்படி நிகழும் போது தான் அதை தவறு என்கிறேன். இதனால் நாம் செயலை சிறப்பாக செய்ய முடியாமல் போகிறது. விளைவும் நாம் எதிர்பார்த்தது போல் அமை வதில்லை.

நாம் இதில் இரண்டு முக்கியமான விஷயங்களை கவ னிக்க வேண்டும்

1. எல்லாமே நான் நினைத்தது போலவே நடக்க வேண்டும் - என்ற எண்ணம்.
2. என்ன வேண்டும் என்ற தெளிவு இல்லா தது.

## 1.எல்லாமே நான் நினைத்தது போல் மட்டுமே நடக்க வேண்டும்!

இந்த எண்ணமானது எப்போதும் அது நினைத்தபடி விஷயங்கள் சரியாக நடக்கின்றதா என் பதை நம்மை அறியாமலே கவனித்துக்கொண்டே இருக்கும். இதனால் எண்ண வலைக்குள் சிக்கி நிம்ம தியை இழக்கிறோம். இதனால் நாம் எந்த ஒரு செயலை யும் முழுமையாக செய்ய முடியாது.

**மீள்வதற்கான வழி:-**

1. தினமும் இரவு நாம் என்ன செயல் செய் தோம் அதை எந்த சிந்தனையில் செய் தோம் என்பதை ஒரு முறை பார்ப்பது தெளிவை ஏற்படுத்தி இதிலிருந்து வெளி வர உதவி செய்யும்.

2. நினைத்தது மட்டுமே நடக்க வாய்ப்புள்ளதா? - என்ற கேள்வியை உங்களுக்குள் கேட்டு விடை தேடுங்கள் நிச்சயம் மாற்றம் உண்டு.
3. தியானம் - உங்களை மறுசீரமைக்கும்.

## 2. என்ன வேண்டும் என்ற தெளிவை அடையாமல் இருப்பது!

நம் வாழ்க்கையில் என்ன வேண்டும் என்பதை சிந்தித்து பார்த்து முக்கியமாக அது மற்றவர்களின் கருத்தாக இல்லாமல் உங்களுடைய விருப்பமாக இருத்தல் நலம். இது தான் நம் வாழ்கை பாதையின் அடிப்படை என்பதால் எதில் நம் வாழ்க்கையை முழுமையாக அர்ப்பணிக்க போகிறோம் என்பதை தீர்க்கமாக முடிவு செய்ய வேண்டும்.

1. எதில் நம் வாழ்க்கையை முழுமையாக அர்ப்பணிக்க போகிறோம் என்பதை முடிவு செய்ய வேண்டும்.
2. அந்த பாதையில் ஒவ்வொரு படிகளையும், அதில் என்ன இருக்க வேண்டும் என்பதையும் முடிவு செய்ய வேண்டும்.
3. அடுத்த படி என்ன செய்ய வேண்டும் என்பதை இன்னும் துல்லியமாக தெளிவுபடுத்திகொள்ள வேண்டும்.

பிறகு, அடுத்த படிக்கான வேலைகளை ஒவ்வொன்றாக செய்ய துவங்க வேண்டும். தெளிவு இருப்பதனால் அந்த

செய்லகளை நாம் நிம்மதியாக முழுமையாக செய்ய முடியும்.

இதில்,

**'வேகமாக அடைய வேண்டும்'**

என்ற எண்ணம் நம்மை அவசரப்படுத்தும். அந்த அவசர கதியில் சிக்கி கொள்ளமல் இருக்க தியானம் கைகொடுக்கும்.

இந்த பாதையை மற்றவர்கள் குழப்பவும் வாய்ப்புள்ளது. நாம் உறுதியாக இருந்தால் அதையும் முறியடிக்கலாம்.

நான் மேற்குறிய காரணங்கள் பற்றிய தெளிவு உங்களுக்கு இல்லையெனில் நிச்சயம் நீங்கள் தடுமாற கூடும். என்னை பொறுத்தவரை தடுமாற்றம் தவறில்லை! அதைக்கொண்டு தான் நாம் தெளிவையே அடைகிறோம் என்பதால்!" என்று முடித்தேன்.

இருவரும் மனதார அதை ஏற்றுக்கொண்டனர். அவர்களின் முகத்தில் தென்பட்ட பிரகாசம் அவர்களுக்குள் தெளிவு ஏற்பட்டுள்ளதை உணர்த்தியது.

தடுமாற்றங்களை மற்றும் தோல்விகளை கண்டு நாம் பயம் கொள்வதால் தான் நம் வெற்றியானது நம்மை விட்டு விலகிபோய்க்கொண்டே இருக்கிறது. எதையும் தெளிவான பார்வையோடு அணுக தொடங்கிவிட்டால் எல்லாம் சுகமே!

குருவும், குமரனும் அங்கிருந்து கிளம்பினார்கள். அடுத்து நம் சந்திப்பு எப்போது என்று குரு கேட்க, நான் உங்களுக்கு தொலைபேசியில் உறுதி படுத்துகிறேன் என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

உங்களுக்கும் தெளிவு ஏற்பட்டிருக்கும் என்று நம்புகிறேன்.

**“அனுபவமே சிறந்த ஆசான், அதை தருவது தடுமாற்றங்களும், குழப்பங்களும், தோல்விகளும் தான். அதனால் இவற்றிலிருந்து நாம் விலகி இருக்க நினைத்தால் வெற்றியிடம் இருந்தும் விலகி நிற்க வேண்டியிருக்கும்”**

அத்தியாயம் 9

# இறுதியாக!

பணத்தை பற்றிய தேடலில், அதை தேடி ஓட வேண்டிய அவசியமில்லை, தகுதியை வளர்த்துக் கொண்டால் போதும் அதற்குரியது நம்மை வந்து சேரும் என்பதை அறிதலில் தொடங்குகிறது செல்வச்செழிப்பும் மன அமைதியான வாழ்க்கையும்...

அதுதான் வாழ்க்கையே!!

ஒவ்வொரு நாளும் நம்முடைய பிரச்சனைகளை எப்படி தீர்க்கலாம் என்பதிலேயே பலரின் வாழ்க்கை போராட் டமாக நடந்து கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட வாழ்க் கையை நம் எதிரி கூட அனுபவிக்க கூடாது.

வாழ்க்கை என்பது நமக்கு பிடித்ததை செய்து கொண்டு, நமக்கு சுற்றியுள்ளவர்களோடு சேர்ந்து கொண்டாடும் ஒரு கொண்டாட்டமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு மனித உயிரும் அப்படியொரு வாழ்க்கையை தான் அனுபவிக்க வேண்டும் என்று ஆசை கொள்கிறேன்.

பணத்தை தேடுவது மட்டும் வாழ்க்கையல்ல என்பதை குரு புரிந்துகொண்டார். அவர் வாழ்க்கை கொண்டாட் டமாக மாறிவிட்டடது.

கடந்த சந்திப்பு நடந்து 10 நாட்களுக்கு பிறகு நான் குருவை தொலைபேசியில் தொடர்புகொண்டு ஒரு வாரம் கழித்து ஒரு குறிப்பிட்ட தேதியில் சந்திக்கலாம் என்று கூறினேன். அவரும் வருகிறேன் என்று ஒப்புக் கொண்டார்.

இந்த சந்திப்புதான் இறுதியான விளக்கங்களை பகிர்ந்து கொள்ளும் சந்திப்பாக இருக்கும். என்ன நடக்க போகிறது என்பதை காண காத்திருந்தேன்.

நாங்கள் சந்திக்கும் நாளும் வந்தது.

என்னுடைய வீட்டு மாடியில் அவருக்காக காத்துக் கொண்டிருந்தேன். சரியாக மாலை 5.30 குரு வந்தார். வழக்கமான விசாரிப்புகள் முடிந்தவுடன் எங்கள் முக் கிய உரையாடல் தொடங்கியது.

“வாழ்க்கை எப்படி போய்க்கொண்டிருக்கிறது!” என்று குருவிடம் கேட்டேன்.

“அருமையாக” என்றார்.

“தொழில் எப்படி நடந்து கொண்டிருக்கிறது?!” என்று கேட்டேன்

“சிறப்பாக, அதோடு கொஞ்சம் நிம்மதியாக!” என்றார்

“சந்தோசம்” என்றேன்
“அந்த பெரிய கட்டிட காண்ட்ராக்டர் கொடுத்த வேலையை செய்து முடித்துவிட்டேன். அவருக்கு மிக வும் திருப்தி. அதனால் அதே போன்ற அடுத்து ஒரு வேலையை கொடுத்துள்ளார். இன்னும் சில தினங்க ளில் அதை ஆரம்பிக்க வேண்டும்” என்றார்

கேட்கவே அவ்வளவு ஆனந்தம்...

“சந்தோசம்! தொடர்ந்து உங்கள் மனநிலையை இதே போல் பாதுகாத்து கொள்ளுங்கள்” என்றேன்

“நிச்சயமாக! மீண்டும் என் பழைய தவறுகளை செய்ய மாட்டேன் என்று தோன்றுகிறது.” என்றார்

“மிகவும் சந்தோசம்! ஒருவேளை செய்தால்?” என்ற தற்க்கு.

“அதிலிருந்து எப்படி வெளியில் வர வேண்டும் என்பது தான் எனக்கு தெரியுமே! அதனால் கவலை இல்லை” என்றார்.

அவருடைய தன்னம்பிக்கை எனக்கு மிகவும் மகிழ்ச் சியை தந்தது. அந்த பதிலுக்கு ஒரு புன்னகையை மட் டும் வெளிப்படுத்தி விட்டு அமைதியாக இருந்தேன்.

“நன்றி! அடுத்ததாக நாம் என்ன பார்க்க போகிறோம்” என்று கேட்டார்.

“ஒன்றுமில்லை” என்றேன்

“என்ன சொல்கிறீர்கள்?” என்றார் ஆச்சர்யமாக...
“திருப்தியான வாழ்க்கையை வாழ்கிறீர்கள் தானே!” என்றேன்

“ஆம்! முழுமையாக மனதிருப்தியோடு வாழ்கிறேன்” என்றார்

“வேறென்ன வேண்டும் உங்களுக்கு!” என்றதற்கு

“மனதை பற்றி இன்னும் விரிவாக, ஆழமாக கற்றுக் கொள்ள விரும்புகிறேன்” என்றார்.

“உங்கள் மனதை கையாள கற்றுக்கொண்டீர்கள் தானே?!” என்றேன்

“ஆம்! ஆனால் இன்னும் கற்றுக்கொள்ள இருக்கலாம் அல்லவா? இன்னும் துல்லியமாக அதை பயன்படுத்துவது எப்படி? என்று தெரிந்துகொள்ள ஆசை” என்றார்.

“துல்லியம் என்பது எந்த ஒரு செயலையும் நாம் தொடர்ந்து விழிப்புடன் செய்வதால் ஏற்படும் ஒரு புரிதல் தான். அதனால் இப்பொழுது தாங்கள் கற்றுக்கொண்டதை தொடர்நது செய்யுங்கள். அதுவே போதுமானது” என்றேன்

அமைதியாக இருந்தார் ...

“நம்முடைய முதல் சந்திப்பில் நீங்கள் என்ன சொன்னீர்கள், நான் வாழ்க்கை எப்படி போய்க்கொண்டிருக்கிறது என்று கேட்ட போது” என்றதற்கு.

“புலம்பினேன்” என்றார்

“இப்பொழுது அதே கேள்விக்கு என்ன பதில் சொன்னீர்கள்?” என்றதற்கு

“மனநிறைவான வாழ்க்கை” என்றார்.

“அவ்வளவுதான் நம் ஒவ்வொருவரின் தேவையும். அதை நீங்கள் அடைந்து விட்டீர்கள். வேறென்ன, அதை ஆனந்தமாக கொண்டாடுங்கள்” என்றேன்.

“உண்மைதான்! அதை நான் நிச்சயம் செய்வேன். ஆனாலும் நான் மேலும் மேலும் வளர வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதனால் தான்” என்றார்.

“வளருங்கள்! சந்தோசமாக வளருங்கள்” என்றவுடன்

“அதற்குத்தான்! மேலும் கற்றுக்கொள்ள விரும்புகிறேன்” என்றார்.

“நீங்கள் கற்றுக்கொள்ள தயாராக இருக்கிறீர்கள். ஆனால் கற்று தர வேறொன்றும் என்னிடம் இல்லை.” எனறவுடன்

அமைதியானார்.

“நீங்கள் ஒரு அடிப்படையை புரிந்துகொள்ள வேண்டும்.

**மனநிறைவான வாழ்க்கை என்பது நீங்கள் உங்கள் மனதை கையாளும் திறமையினால் கிடைப்பது. மாறாக, அது நம் பொருளாதார தகுதியை சார்ந்தது அல்ல.**

உங்கள் மனம் இன்று ஒரு இலக்கை தீர்மானிக்கும். அதை அடைந்தவுடன் இன்னொன்றை தீர்மானிக்கும். இந்த செயலுக்கு எல்லையே இல்லை.

மனம், நம் கையில் இருக்குமானால் எதை கொண்டு வேண்டுமென்றாலும் மனநிறைவான வாழ்க்கையை வாழ முடியும்.

நீங்கள் என்னிடம் முதலில் வந்தபொழுது உங்கள் வாழ்க்கை மிக மோசமானதாக உள்ளது என்று சொன் னீர்கள். இல்லையா?”

“ஆம்” என்றார்.

“அதை மாற்ற வேண்டும் என்று கேட்டீர்கள், இல் லையா?”

“ஆம்” என்றார்.

“ஆனால், நாம் இவ்வளவு நாட்கள் கற்றது என்ன? உங் கள் வாழ்க்கையை மாற்றுவது எப்படி என்றா? இல்லை, உங்கள் மனதை கையாள்வது எப்படி என்றா?” என்ற தற்கு.

“மனதை கையாளும் விதம் பற்றி தான்” என்றார்.

“ஏனென்றால், உங்கள் வாழ்க்கையில் நீங்கள் சந்தித்த ஒவ்வொரு பிரச்சனையும் உங்கள் மனதை எப்படி கையாள்வது என்பது தெரியாததால் ஏற்பட்டவைதான்.

அதனால் தான் நாம் அதை செய்தோம். அது உங் களுக்கு மனதை கையாளும் திறனை கற்று தந் தது. அதன் மூலம் உங்கள் சிந்தனைகளும், செயல்க ளும் சிறப்பானது. உங்கள் தேவைகளும் பூர்த்தியடைய துவங்கியது. சரிதானே!” என்றேன்

“சரி தான்!” என்றார்.

“இனி உங்களுக்கு தேவையானதை நீங்கள் உருவாக் கிகொள்வது என்பது சுலபம் தானே?”

“அப்படித்தான் தோன்றுகிறது! அப்படியென்றால் இனி நான் கற்றுக்கொள்ள ஒன்றுமில்லையா?” என்றார்

“அப்படி நான் சொல்லவில்லை, ஒரு வாகனத்தை நீங் கள் இயக்க கற்றுக்கொண்டால் நீங்கள் எவ்வளவு தூரம் வேண்டுமென்றாலும் பயணம் செய்யலாம். பயணமும் சுகமாக இருக்கும் இல்லையா?”

“ஆம்” என்றார்

“நம்முடைய சந்திப்புகளும் இதை போன்றது தான். ஆனால் வாகனத்தை இயக்க கற்றுக்கொள்வது என்பது அடிப்படை தான். அது முழுமையாகாது.

நீங்கள் உங்கள் பயணம் பற்றி தொடர்ந்து கற்றுக் கொண்டே தான் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் சரியான பாதையில் சரியான இடத்தை சென்று சேர முடி யும்” என்றதற்க்கு

“அப்படியென்றால், மனதை கையாளும் அடிப்படை அறியாமல் நாம் எந்த பயணத்தை தொடங்கினாலும் அதை நல்லபடியாக முடிக்க முடியாது. இல்லையா?” என்றார்

“வாகனத்தை இயக்க கற்றுக்கொள்ளாமல் நீங்கள் பய ணத்தை தொடங்கினால் அடுத்த ஐந்தாவது நிமிடம் நீங் கள் விபத்துக்குள்ளாவீர்கள். அது இன்று நம் ஒவ்வொ ருவர் வாழ்விலும் நிகழ்கிறது” என்றேன்.

“புரிகிறது! ஆனால் நாம் மனதை பற்றி கற்றுக்கொள்ள வேண்டும் என்ற விழிப்புணர்வு நம்மிடையே மிகவும் குறைவு தான். அது கொஞ்சம் வருத்தமாக தான் இருக் கிறது” என்றார்

**“இந்த உலகிலேயே மிக கொடிய**
**நோய் அறியாமை தான்”**

என்றவுடன்.

“உண்மை” என்றார். சிறிது நேரம் மௌனம்...

“அப்படியென்றால், அடிப்படையை கற்றுக் கொண்டு விட்டேன் ஆனால் பயணத்தை பற்றி தொடர்ந்து கற் றுக்கொண்டே தான் இருக்க வேண்டும். இல்லையா?” என்றார்

“நிச்சயமாக! கற்றுக்கொள்வதற்கு இங்கே எல்லையே இல்லை!” என்றேன்.

“இனி என் தொழிலை மேம்படுத்த, அல்லது வேறு செயல்களை செய்ய நான் கற்றுக்கொண்டால் போதுமா னது” என்றார்

“ஆம்”

“அதில் சந்தேகங்களும், குழப்பங்களும் வரும் இல்லையா?” என்றார்

“நிச்சயமாக வரும்! ஆனால் அதை சரிசெய்வதில் உங்கள் மனமே உங்களுக்கு உறுதுணையாய் இருக்கும். நீங்கள் வேண்டியதை அடையும் பாதையை அது காட்டும்” என்றேன்.

“நல்லது! ஆனால் மனதை கையாள முழுமையாக கற்றுக் கொண்டுவிட்டேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?” என்றார்.

“முழுமையாக என்று சொல்ல முடியாது, ஆனால் அது உங்களை தொந்தரவு செய்யாத அளவு நீங்கள் கற்றுக் கொண்டீர்கள். அதோடு உங்களுக்கு தேவையானதை உருவாக்குவது எப்படி என்றும் கற்றுக்கொண்டீர்கள்.

இப்பொழுது நீங்கள் வாழும் மனநிறைவான வாழ்க்கை சூழலே அதற்கான சாட்சி” என்றேன்.

“மிகவும் சந்தோசமாக இருக்கிறது! அதே நேரத்தில் நானா இப்படி மாறினேன் என்று ஆச்சர்யமாகவும் இருக்கிறது” என்றார்.

“உண்மையான மாற்றம் அப்படித்தான் இருக்கும். மாற்றம் நிகழ்ந்ததே நாம் கூர்மையாக கவனித்தால் மட்டுமே கண்டறிய முடியும். நீங்கள் என்ன என்ன கற்றுக்கொண்டீர்கள் என்பதை முழுமையாக அறிய விருப்பமா?” என்றதற்கு

“நிச்சயமாக! எப்படி?” என்றார்

“சில கேள்விகளை உங்களிடம் கேட்கிறேன். அதற்கான பதில் தான் நீங்கள் எவ்வளவு கற்றுக் கொண்டீர்கள் என்பதை காட்டும்” என்றான்

“கேளுங்கள்” என்று உற்சாகமடைந்தார்.

**“ஈர்ப்பு விதி இருக்கிறது என்பதை இப்பொழுது உங்களால் உணர முடிகிறதா?”**

“முடிகிறது! நீங்கள் ஆரம்பத்தில் சொல்லும்போது வேடிக்கையாக தெரிந்தாலும் போக போக அதன் செயல்பாடுகளை என்னை சுற்றி நிகழ்ந்த சூழல்களை கொண்டு காண முடிந்தது. அந்த விதி இயற்கையானது அதை கண்ணால் காண முடியவில்லை என்றாலும் அதன் விளைவுகளால் அதை உணர முடிந்தது.”

**“ஈர்ப்பு விதியை பயன்படுத்த நீங்கள் என்ன செய்ய வேண்டும்?”**

“அது எப்போதும் இயங்கிக்கொண்டிருக்கும் ஒன்று. அதை பற்றி யோசிக்க வேண்டிய அவசியமில்லை என்று தோன்றுகிறது. நம் மனதின் எண்ணங்கள் தான் விளைவுகள் ஆகின்றன என்பதால் அதில் கவனம் செலுத்தினால் போதும் என்பதை புரிந்துகொண்டேன்”

**“ஒரு செயலை செய்ய வேண்டும் என்ற நிலையில் நீங்கள் முடியாது என்று சிந்திப்பது சரியா?”**

“இல்லை, முடியுமா முடியாதா என்பதை முயற்சித்து பார்த்து அறிந்துகொள்ள வேண்டும் என்று தான் தற் போதெல்லாம் தோன்றுகிறது! கடந்த கால அனுபவங் களை வைத்து தான் எதிர்கால செயல்களை தீர்மானிக் கிறேன் என்றால் புதியவைகளுக்கு இடமில்லை என்று புரிந்துகொண்டேன். அதோடு என் தகுதி நாளுக்கு நாள் வளரும் போது அதை முயற்சித்து பார்த்து அறிவது தான் சரி என்று தோன்றுகிறது”

**“மிக வேகமாக முன்னேற வேண்டும் என்பது எப் போதும் நம் எல்லோரின் ஆசையாக இருக்கிறது. வேகமாக முன்னேற நாம் செய்ய வேண்டிய அடிப் படை என்ன?”**

“மெதுவாக செயல்களை செய்வது! அவசரம் ஒரு நாளும் வெற்றியை தருவதில்லை என்பதை நன்கு உணர்ந்து கொண்டேன். ஏனென்றால், வேகமாக முன் னேற தேவை தெளிவான சிறப்பான செயல்கள் தானே தவிர, அவசரமான அரைகுறையான செயல்கள் அல்ல!”

**“உங்கள் வாழ்க்கை எப்பொழுது மாற துவங்கியது என்று எண்ணுகிறீர்கள்?”**

“நான் என் வாழ்க்கையை நூறு சதவீதம் கையில் எடுத் ததால் தான் மாற தொடங்கியது. என் நிறை குறைகளை ஏற்றுக்கொள்ள தயாராக இருந்தபொழுது அது மேலும் வேகமாக முன்னேற்றம் அடைய தொடங்கியது! சூழல்க ளையும் மனிதர்களையும் காரணம் கூறிய வரை எதுவும் மாற்றவில்லை”

**“உங்களின் மிக முக்கியமான வேலை என்ன?”**

“என் மனதை சமநிலையில் வைத்திருப்பதை தான் இப்பொழுது மிக முக்கியமான வேலை என்று கருது கிறேன். அதை தான் செய்கிறேன். அப்பொழுது தான் என் செயல்களை என்னால் சிறப்பாக செய்ய முடிகிறது. நிம்மதியாக சந்தோசமாக செய்ய முடிகிறது. அதன் முக் கியத்துவம் அறிந்ததால் தான் இந்த மாற்றம் என்று கரு துகிறேன்”

**“வாழ்வின் அடிப்படை என்று நீங்கள் என்ன கருது கிறீர்கள்?”**

“நான் என்ன கொடுக்கிறேனோ அதையே பெறுகிறேன். இது நாள் வரை அது பொருட்கள் சார்ந்தது என்று எண்

ணிக்கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுதுதான் அது உணர்வுகள் சார்ந்தது என்பதை புரிந்துகொண்டேன். நான் சந்தோசமாக செய்யும் ஒவ்வொரு செயலின் விளைவும் சந்தோசமாக கிடைப்பதை பார்க்கிறேன்"

**"மற்றவரின் வெற்றியை பார்க்கும் போது உங்களுக்கு என்ன தோன்றுகிறது?"**

"என்னை பற்றிய தாழ்வான எண்ணம் இருந்த வரை நான் இன்னும் வெற்றி அடையவில்லையே என்று வருத்தப்பட்டிருக்கிறேன். ஆனால் இப்பொழுது வெற்றியை மட்டும் பார்க்கிறேன் அதனால் அது எனக்கு சந்தோசமாக இருக்கிறது. வெற்றி என்றாலே ஆனந்தம் தானே! உன்னுடையதா, என்னுடையதா எனும்போது தான் வருத்தம் வருகிறது என்று உணர்ந்துகொண்டேன்"

**"நீங்கள் வறுமையில் வாடியதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?"**

"பற்றாக்குறை பற்றிய சிந்தனை என்று நினைக்கிறன். அந்த சிந்தனைகளால் என்னால் எதுவும் செய்ய முடியாது என்ற நம்பிக்கைக்குள் தள்ளப்பட்டேன். ஆனால், என்னிடம் இருக்கும் நல்ல விஷயங்களை நான் பார்க்க தொடங்கியவுடன் என் வாழ்க்கை மாற தொடங்கியதை நான் பார்த்தேன். புது நம்பிக்கையும் பிறந்திருக்கிறது "

**“உங்களுக்கு நடக்கும் எதிர்மறை சூழலை மாற்ற நீங்கள் என்ன செய்வீர்கள்?”**

“முதலில் அதை எப்படி எடுத்துக்கொள்கிறேன் என்பது முக்கியம் என்று எண்ணுகிறேன். எனக்கு என்ன நடந்தாலும் அதற்க்கு என்னுடைய எதிர்வினையை என்னால் தீர்மானிக்க முடியும் போது என்னால் அந்த சூழல் மீண்டும் நிகழாமல் தடுக்க முடியும்”

**“உங்கள் வாழ்க்கையை உருவாக்கும் அடிப்படையில் நீங்கள் கற்றுக்கொண்ட முதல் விஷயம் என்ன?”**

“என்னை பற்றி அறிந்துகொள்வது! நான் உண்மையில் எப்படிப்பட்டவன் என்பதை அறியும்வரை என் வாழ்வில் எந்த மாற்றமும் நிகழவில்லை! என்னை நானே பார்த்த போது நிறைய மாற்றங்கள் நிகழ்ந்தன”

**“ஒரு சிந்தனை வலையில் சிக்கி கொண்டீர்கள் என்பதை எப்படி கண்டுகொள்வீர்கள்?”**

“சுயநினைவு இல்லாமல் இருப்பதை கொண்டு”

**“அதிலிருந்து வெளியில் வர என்ன செய்வீர்கள்?”**

“முதலில் அதோடு போராடுவதை நிறுத்துவேன். சிந்தனைகள் நடக்கட்டும் என்று அனுமதிப்பேன். அதை நான் எழுதிக்கொண்ட போது ஒரு நிம்மதியை உணர்ந்தேன். மனஅமைதியை உணர்ந்தேன். ஒரு சில நேரங்களில் நான் தெளிவடைய வேண்டிய விஷயங்களில் முழுமையான ஈடுபாடு கொண்டு சிந்திப்பேன். அதனால் அது முழுமையடைந்து நிம்மதியை உணர்வேன்”

**“உங்களுக்கு விருப்பம் இல்லாத ஒன்று உங்களுக்கு நிகழும் போது நீங்கள் என்ன செய்வீர்கள்?”**

“எல்லாமே நான் நினைத்தபடி மட்டுமே நடக்க வாய்ப்பில்லை. அதனால் அதிலிருந்து நான் கற்றுக்கொள்ள ஏதேனும் உள்ளதா என்று பார்ப்பேன். இப்படித்தான் நடந்தாக வேண்டும் என்ற எந்த கட்டாயமும் இல்லாத போது எது நடந்தாலும் அதை கையாள்வது பெரிதாக தெரியவில்லை”

**“அந்த நிகழ்வு உங்கள் தவறினால் நிகழ்ந்தது என்று நீங்கள் உணரும் போது என்ன செய்வீர்கள்?”**

“ஏன் அந்த தவறை செய்தேன் என்று கவனிப்பேன். அதை சரிசெய்ய தொடங்கியிருந்தால் அதை தொடர்வேன். இல்லையென்றால் அதைப்பற்றிய தெளிவை ஏற்படுத்திகொண்டு அதை சரிசெய்ய முயல்வேன்.”

**"அந்த தவறை எண்ணி உங்களை நீங்களே குறை பட்டு கொள்வீர்களா?"**

"ஆரம்பத்தில் அப்படித்தான் இருந்தேன். ஆனால் இன்று அது தேவையில்லை என்று தோன்றுகிறது. தவறு செய்வதும் அதை சரி செய்துகொள்வதும் இயல்புதான் என்று எண்ணுகிறேன். அதை சரிசெய்யாமல் புலம்பிக் கொண்டே இருப்பதில் எந்த பயனும் இல்லை என்பதை அனுபவமாக உணர்ந்துகொன்டேன்"

**"உங்கள் சிந்தனையை சரிசெய்ய என்ன செய்வீர் கள்?"**

"என்ன சிந்திக்கிறோம் அதை எப்படி சிந்திக்கிறோம் என்பதை கவனித்தாலே அது தானாக சரியாகிவிடு வதை உணர்ந்திருக்கிறேன். புத்தர் கூறியது போல, 'கலங்கிய நீரை அப்படியே விட்டுவிட்டால் அது தானாக தெளிந்து விடும்"

**"உங்கள் மனதை உங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வர நீங்கள் என்ன செய்வீர்கள்?"**

"வெறுமனே கவனித்தால் போதும் என்று பலமுறை கண்டிருக்கிறேன். அது எந்த மாதிரியான உணர்ச்சி நிலைக்கு சென்றாலும் அதோடு இணைந்து பயணிக்

காமல் அதை வேடிக்கை பார்க்கும்போது அந்த உட்ச பட்ச உணர்ச்சிநிலை அடங்குவதை கண்டிருக்கிறேன். ஆனால் அதை வேடிக்கை பார்ப்பதென்பது சாதாரண விஷயமாக தோன்றவில்லை. முயன்றால் நிச்சயம் முடியும். சுலபமானது தான். ஆனால் அவ்வளவு சீக்கிரம் அதை செய்ய முடியவில்லை"

**"உங்கள் மனதை கட்டுப்பாட்டில் கொண்டு வர அதை அடக்க முயற்சிப்பது சரியா?"**

"நிச்சயமாக வாய்ப்பே இல்லை என்று தான் கருதுகிறேன். அதோடு போராடும் ஒவ்வொரு முறையும் அது என்னை வென்று விடுகிறது. ஆனால் நான் போராடுவதற்கு பதிலாக வேடிக்கை பார்த்தால் அடங்க தொடங்கி விடுகிறது! என்ன ஒரு விந்தை"

**"எந்த ஒரு தேவையையும் நீங்கள் பூர்த்தி செய்து கொள்ள உங்கள் மனதில் தடையாக இருப்பது எது?"**

"என்னால் முடியாது என்று எண்ணுவது தான். முடியமா என்று முயற்சித்தால் கூட வழிகள் வருகிறது. ஆனால் முடியாது என்று முடிவு எடுத்து விட்டு முயற்சித்தால் எந்த வழியும் தென்படவில்லை."

**“பணத்தை சம்பாதிக்க நீங்கள் கற்றுக்கொண்டீர் களா? ஆம் என்றால் எப்படி ?”**

“வெறுமனே பணம் பணம் என்று புலம்பியவரை பணத்தை ஈட்ட முடியவில்லை. பணத்தை பற்றிய தெளி வும், அதற்க்கு என்ன செய்ய வேண்டும் என்ற புரிதலும் பணத்தை என் வாழ்வில் அதிக படுத்தின. நான் என்ன செய்துகொண்டிருக்கிறேன் பணத்தை சம்பாதிக்க என் பதை நான் கண்டபோது, நான் வறுமையில் வாடுவது தவறில்லை என்றே தோன்றியது. ஏன்னென்றால், ஒன் றுமே செய்யாமல் பணம் மட்டும் வேண்டும் என்று எண் ணினால்...”

**“பணம் மட்டும் இலக்கு! அதை நிறைய அடைந்து விட்டால் நாம் நினைத்ததை எல்லாம் அடைந்து விட லாம் என்ற எண்ணம் சரியா?”**

“அப்படித்தான் நானும் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் மனம் நம் வசப்பட்டால் தான் பணமே நம் வசப்படும் என்பதை கண்டுகொண்டேன். பணம் மட்டும் அல்ல ஆரோக்யம், நல்ல உறவுகள், தொழில் வெற்றி கள் என எல்லாமே சுலபம் தான் என்று தோன்றுகிறது. ஏனென்றால் அப்படி ஒரு நிம்மதியை அடைந்திருக்கி றேன்”

**“அப்படியென்றால், பணத்தை தேடியது தவறு என்று நினைக்கிறீர்களா?”**

“நிச்சயமாக இல்லை! சந்தோசமாக தேடுவதை விட்டு விட்டு கவலையோடும், ஏக்கங்களோடும் அதை செய் தேன் என்பதுதான் வருத்தம் அளிக்கிறது. இப்பொ ழுது போல சந்தோசமா தேடினால் நான் பணத்தை தொடர்ந்து சம்பாதித்துக்கொண்டே இருக்கத்தான் ஆசை கொள்வேன்”

**“வாழ்க்கை ஒரு போர்க்களம் என்று பலர் கூற கேட்டிருப்பீர்கள். அது உண்மை என்று இப்பொழுது தோன்றுகிறதா?”**

“அதை நானும் சொல்லிக்கொண்டு தான் இருந்தேன். ஆனால் மனதை கையாள தெரியாவிட்டால் ஒரு சிறு செயலும் போராட்டமாக நிகழும்போது வாழ்க்கை மட் டும் எப்படி பூவனமாக இருக்க முடியும். எல்லாம் மனக் கண்ணோட்டத்தை பொறுத்தது என்று புரிந்துகொண் டேன்”

**“நீங்கள் சந்தோசமாக இருக்க என்ன வேண்டும்?”**

“ஒன்றுமே தேவையில்லை என்று எண்ணுகிறேன். ஏனென்றால், என்னிடம் இருப்பதையே சந்தோசமாக அனுபவிப்பது எப்படி என்பதை கற்றுக்கொண்டேன்.

எதுவும் இல்லையென்றாலும் சந்தோசமாக இருக்க முடியும் என்பதுதான் உண்மை. இதெல்லாம் இருந்தால் தான் சந்தோசம் என்று எண்ணியதை எண்ணி எனக்கு சிரிப்பு தான் வருகிறது. மனதின் மாய வேலை அது!"

**"நம்மிடம் இருப்பதன் அருமையை உணர்ந்தாலே சந்தோசமாக இருக்க முடியும் என்று சொல்கிறீர்கள். இல்லையா?"**

"நிச்சயமாக! நீங்கள் சொன்னது போல் அது நம் கடமை என்றும் எண்ணுகிறேன். நமக்காக இயற்கை, மனிதர்கள், சூழல்கள் என்று எவ்வளவு விஷயங்கள் நம் தேவைகள் தீர்க்க நடக்கின்றன என்பதை ஒரு முறை உணர்ந்தாலே ஒரு நிம்மதியும் சந்தோஷமும் வந்துவிடும். அதோடு நம்பிக்கையும்"

**"வாழும் கலை என்று நீங்கள் நினைப்பது என்ன?"**

"இன்று இந்த நொடி நல்லதை உணர்ந்து விட்டு, நாளை என்பதை மறந்து முழுமையாக செயல்கள் செய்வதை தான். கடந்த காலத்தையே நினைத்து கொண்டிருப்பதும் வீண். எதிர்காலத்தை மட்டும் திட்டமிடுவதும் வீண். நிகழ்காலத்தில் தான் எல்லா சந்தோஷங்களும் இருக்கின்றன"

**"இலக்குகள் வேண்டாமா?"**

"இலக்குகள் வேண்டும். அப்போதுதான் நான் என்ன செய்ய வேண்டும் என்று தெரிகிறது. ஆனால் எப்பொழு தும் அதை பற்றியே சிந்திப்பது மிக அழுத்தத்தை தரு கிறது. நிம்மதி இழக்கிறேன். நாளைய வெற்றிகளுக்காக இன்றைய சந்தோசத்தை இழப்பது சரி என்று தோன்ற வில்லை. சந்தோஷமாகவே வெற்றியை அடையலாமே!"

**"உங்களை மேம்படுத்துவதில் அடிப்படையாக நீங் கள் கருதுவது என்ன?"**

"தெளிவு! என்ன நடக்கிறது, அதை எப்படி செய்கிறேன். என்ன செய்ய வேண்டும் என எல்லாவற்றிற்கும் தேவை தெளிவு தான் என்று எண்ணுகிறேன். என்ன இருக்கி றது என்ற தெளிவை பெறாமல் எதையும் மேம்படுத்த முடியாதல்லவா!"

**"ஒரு செயலில் நீங்கள் முன்னேற வேண்டுமென் றால் நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களுக்கு என்ன தேவை?"**

"ஈடுபாடும், தெளிவும் கொண்டு என்னால் ஒரு செயலை முன்னேற்ற பாதையில் கொண்டு செல்ல முடிகி

றது. இதுவரை வெறுமனே சிந்தனையில் மட்டுமே ஏதோதோ சிந்தித்து கொண்டு முன்னேற்றி விடுவேன் என்று நம்பிக்கை பேசிக்கொண்டிருந்தேன். அதில் ஏதும் நடக்கவில்லை"

"நீங்கள் எதை செய்தாலும் அதன் அடிப்படை மனம் தான். இப்பொழுது சொல்லுங்கள் இதை கொண்டு நீங் கள் என்ன வேண்டுமோ அதை உருவாக்க முடியும் அல் லவா?"

"நிச்சயமாக! முடியும்!"

"பார்த்தீர்களா! உங்கள் அனுபவங்களை?" என்றேன்.

"ஆம்! பெரிதாக கற்றுக்கொண்டது போல் தோன்ற வில்லை. ஆனால் ஒவ்வொரு கேள்வி கேட்டவுடன் என்ன செய்ய வேண்டும் என்பது என் மனதில் அடுத்த கணம் பளிச்சிடுகிறது" என்றார்

"எவ்வளவு கற்றுக்கொண்டீர்கள் என்பது இப்பொழுது உங்களுக்கு புரிந்திருக்கும். நல்லது"
என்றேன்.

"கோடி நன்றிகள் உங்களுக்கு தான்! நன்றி" என்றார்.

என்னிடம் வேறு வார்த்தைகள் இல்லை. மனநிறைவும் ஆனந்தமும் தான்.

சிறிது நேர அமைதிக்கு பிறகு...

"இது தான் நம் இறுதி சந்திப்பு இல்லையா?" என்றார் வருத்தமாக

“அப்படியில்லை! எப்போது வேண்டுமென்றாலும் நாம் சந்திக்கலாம் எதை பற்றி வேண்டுமென்றாலும் பேச லாம். கற்றது போதும், அதற்கான பலனை அனுபவியுங் கள் என்று தான் கூறுகிறேன்” என்றேன்.

“நன்றி, நன்றி நன்றி” என்று கூறி விடை பெற்று சென்றார்.

குரு கற்றுகொண்டவைகளும், அவர் அனுபவங்களும் உங்களுக்கு ஒரு தெளிவை தரும் என்று நம்புகிறேன்.

வாழ்க்கை மிகவும் அழகானது. அதை அவசர அவசர மாக வாழ்ந்து வீணடித்து விட கூடாது. நிதானமாக நன்கு அனுபவித்து வாழ்ந்தால் அதன் சுகமே தனி தான்.

**பணம் சம்பாதிப்பது எப்படி? எவ்வளவு வேகமாக அதை சம்பாதிக்கலாம் என்ற கேள்வி உங்களுக்கு இருக்கலாம்.**

நான் கூறவது என்னவென்றால்,
மனதை கையாள்வது எப்படி என்பதை நாம் அறியா ததால் தான் நாம் பணம் சம்பாதிப்பதில் இவ்வளவு போராட்டங்கள். மனதை கையாள கற்றுக்கொண்ட பின் பாருங்கள் உங்கள் முன் ஆயிரம் வழிகள் (நேர்மையாக வே) இருப்பதை பார்க்க முடியும்.

உங்கள் தகுதியை நீங்கள் வளர்த்துக்கொள்ள உங்கள் செயலும் மேம்படும். அதன்பின் அதற்கான விளைவுக ளும் உங்களை பலமடங்காக வந்தடையும். இயற்கை யாகவே நாம் செல்வச்செழிப்புடன் தான் இருக்கிறோம் என்பதை அப்போது நீங்கள் உணர்வீர்கள்.

நீங்கள் இந்த உலகிற்கு கொடுக்கும் செயலுக்கான விளைவு தான் பணம். இதை உணர்ந்தால் உங்கள் வாழ்க்கை செழிப்படையும்.

உங்கள் வாழ்க்கை செழிப்படைய பிரபஞ்சத்தை மனதார பிரார்த்திக்கிறேன்.

நன்றிகள் கோடி ....

உங்கள் கருத்துக்களை வரவேற்கிறேன்...

devamirracles@gamil.com